தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 240

# அகத்தியர் (லோகமாரணம்) 110




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

## சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்.

2001 ]    [ விலை ரூ. **30—00**

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 240.

# அகத்தியர் (லோகமாரணம்) 110

சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர்:

டாக்டர் ச. அரங்கராசன், பி. ஐ. எம்.,

சித்த மருத்துவ அலுவலர்

தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்.

2001 ] [ விலை. ரூ. 30—00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | அகத்தியர் (லோகமாரணம்) 110 |
| பதிப்பாசிரியர் | : | மருத்துவர் ச. அரங்கராசன் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம். |
| வெளியீட்டு எண் | : | 240 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | மூன்றாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | நவம்பர், 2001 |
| தாள் | : | 14. 2 கி.கி. டி.என்.பி.எல். |
| நூல் அளவு | : | 21 x 14 செ.மீ. |
| பக்கங்கள் | : | 126 |
| படிகள் | : | 1000 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலக அச்சகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | சித்த மருத்துவம் |
| விலை | : | ரூ. 30—00 |

# மூன்றாம் பதிப்பின்
# வெளியீட்டாளர் முகவுரை

இலக்கிய உலகினரின் கவனத்தை மட்டுமல்லாமல் மருத்துவ உலகினரின் கவனத்தையும் ஈர்க்கும் அறிவு மையமாகத் தஞ்சை சரசுவதி மகால் நூலகம் திகழ்ந்து வருகின்றது. குறிப்பாகச் சித்த மருத்துவ இயலுக்கு இந்நூலகம் செய்துள்ள பங்களிப்பு மிகுதி.

சுவடிகளின் அடிப்படையில் சித்த மருத்துவ நூல்களைப் பதிப்பித்து வெளியிடும் வரிசையில் 1986ஆம் ஆண்டு முதற்பதிப்பாகப் பதிப்பித்து வெளியிடப்பட்ட நூலே 'அகத்தியர் (லோகமாரணம்) 110' எனும் இந்நூலாகும். 1990இல் இரண்டாம் பதிப்பைப் பெற்ற இந்நூல் நூலார்வலர்களின் வரவேற்பைக் கருத்தில் கொண்டு இப்பொழுது மூன்றாம் பதிப்பாக வெளிவருகின்றது.

இந்நூலில் சித்த மருத்துவச் சுத்தி முறைகள் பற்பம், செந்தூரம், மாத்திரை, திராவகம் ஆகியன பற்றியும் பல்வேறு வகையான புற்றுகளைக் குணப்படுத்தல் பற்றியும் செய்திகள் இடம்பெற்றுள்ளன.

இந்நூலை முதற்பதிப்பின்போது பதிப்பித்து அளித்தவர் மருத்துவர் ச. அரங்கராசன் ஆவார்.

இந்நூல் வெளியீட்டுக்குத் தேவையான நிதி யுதவியை நல்கியுள்ள நடுவண் அரசுக்கு முதற்கண் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்நூல் நன்முறையில் வெளிவர ஆவனசெய்த நூலக நிருவாக அலுவலர் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், வெளியீட்டு மேலாளர் திரு. அ. பஞ்சநாதன் அவர்களுக்கும், துணைநின்ற ஏனை யோருக்கும், அச்சிட்ட நூலக அச்சகத்தாருக்கும் என் வாழ்த்துகள்!

மருத்துவ உலகினரிடையே இந்நூல் நல்வரவேற் பினைப் பெறும் எனப் பெரிதும் நம்புகின்றேன்.

**சீ. கோசலராமன்,** இ. ஆ. ப.,
*மாவட்ட ஆட்சித் தலைவர்*
*மற்றும் இயக்குநர்*
*சரசுவதி மகால் நூலகம்*

*தஞ்சாவூர்.*
*24—11—2001*

# முதற்பதிப்பின் வெளியிடுவோர் முகவுரை



தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையம் இதுவரை இருபதுக்கும் மேற்பட்ட வைத்திய நூல்களைப் பழங்கால ஓலைச்சுவடிகளினின்று முதன்முறையாக அச்சிட்டு வெளியிட்டுள்ளது. அவ்வரிசைகளில் அகத்தியர் (லோகமாரணம்) 110 என்ற பெயரில் இந்நூல் முதன்முதலாக வெளிவருகிறது.

நோய் நீங்கி வாழ மக்கள் பலவகை உபாயங்களைக் கையாண்டுள்ளனர். வாழ்க்கை முறையிலும் வருமுன் காக்கும் வன்மையைப் பெற்றிருந்தனர். நோய் வந்தபின் காக்கப் பல மருத்துவ முறைகளைக் கையாண்டு வந்துள்ளனர்.

அகத்தியர் லோகமாரணம் 110 என்ற பெயரில் சரசுவதி மகாலில் இரண்டு சுவடிகள் எம். எண். 234 ஏ., எம். எண், 394 உள்ளன. இவைகளை ஒப்பிட்டு இந்நூல் ஆக்கப்பட்டுள்ளது. மக்களின் நல்வாழ்வு கருதி ஆக்கப்பட்ட இந்நூலின் அருமைப்பாட்டினை மிகவும் போற்ற நாம் கடமைப்பட்டுள்ளோம்.

பல்வகை மருத்துவ முறைகளும், ஆய்வுகளும் பல்கிப் பெருகி வளர்ந்து வரும் தற்காலத்தே நம் முன்னோர்கள் கையாண்ட அன்றைய மருத்துவ முறைகளும் இன்றும் பயன்பட்டு வருதல் கண்கூடு. அத்தகு அரிய நூலினைப்

பயன் தரத்தக்க முறையில் ஆய்ந்து வெளியிட்ட பதிப் பாசிரியர் டாக்டர் ச. அரங்கராசன் அவர்களைப் பாராட்டுகி றோம். இது போன்ற அரிய நூல்களை அச்சிட்டு மக்கட்கு அளிக்க, நிதியுதவி அளிக்கும் நடுவண் அரசின் பெருந் தன்மையினைப் போற்றுகின்றோம். இப்பணியைத் திறம் பட ஆற்றிவரும் நூலக நிருவாக அதிகாரி பொறுப்பிலுள்ள திரு. அ. பஞ்சநாதன் அவர்களுக்கும், அச்சகத்தாருக்கும் ஏனையோருக்கும் நன்றி கூறி மகிழ்கிறேன்.

**து. இரா. இராமசாமி, இ. ஆ. ப.,**
*மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் இயக்குநர்.*
*சரசுவதி மகால் நூலகம்.*

*தஞ்சாவூர்*
*24—6—86*

# பதிப்பாசிரியர் முன்னுரை

அகத்தியர் 110 என்ற பெயரில் சரசுவதி மகாலில் இரண்டு சுவடிகள் (M. No. 234 (a) M. No. 394) உள்ளன. இவற்றை ஒப்பிட்டு, கூடிய வரையில் திருத்த மாகப் பதிப்பிக்க எண்ணம் கொண்டு, இந்நூல் ஆக்கப் பட்டது.

இந்நூலில், கடவுள் வணக்கம், சித்தர்கள் வணக்கம் என்பன கூறப்படவில்லை. பெரிய நூல் ஒன்றிலிருந்து எடுத்து எழுதப்பட்ட சுவடிகள் என்றே தோன்றுகின்றது. ஏனெனில், மாத்திரை, திராவகம் போன்ற அக மருந்துகள் செய்வது சொல்லப்பட்டுள்ளது. ஏனைய மெழுகு, குடிநீர் சூரணம், லேகியம், தைலம் என்பன கூறப்படவில்லை. இறுதியாக உள்ள பாடலும் முற்றுப்பெற்றுள்ளதாகத் தெரியவில்லை. 'பூநீறு' என்பதுடன் முடிகின்றது.

இந்நூல் குமரி-நெல்லை மாவட்டத்திலுள்ள ஒருவரே செய்திருக்கக் கூடும். அவ்வட்டாரச் சொற்கள் பெருமளவு இந்நூலில் விரவி, வருகின்றன. குறிப்பாக 'கூறு' 'திவசம்' 'வள்ளம்' போன்ற சொற்கள், குமரி மாவட்டத் திற்கே உரியதான சொற்களாகும். சேர நாட்டுடன் கலந்து உறவாடிய குமரி மாவட்டத்தில் மட்டுமே வழங்கப் படுவன.

அகத்தியர் பெயரால் வழங்கப்பட்டாலும், காலத்தால் மிகவும் பிற்பட்டதாகவே செய்யுள் நடை அமைந்துள்ளது. முத்தமிழ் அகத்தியரோ அன்றிச் சங்க கால அகத்தியரோ இதனை எழுதவில்லை என்பது வினாயகர் வழிபாட்டைக் கூறியதிலிருந்தே மிகவும் தெளிவாகப் புலனாகின்றது. சிறுத்தொண்டர் காலத்திற்குப் பின்பே வினாயகர் வழிபாடு தமிழகத்தில் ஏற்பட்டது என்றும் பௌத்தர்கட்கு உரிய அரசமரத்தில் வினாயகரை வைத்து, சைவ சமயத்தை நிலை நிறுத்துவதும் பிற்கால வழக்கமே. அகத்தியர் என்பதை நிலைநிறுத்துவான் வேண்டி, பாடல்களின் இடையில் 'குறுமுனி' என்றும், 'பொதிகை முனி' என்றும் கூறுகின்றார். மேற்படி (பாடல் 87, பாடல் 86, பாடல் 54 பாடல் 45) நூலாசிரியர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பது மருந்துகளை, வயிரவர், சாமுண்டி, சிவன், தேவி வினாயகர் என்பவர்களுக்குப் பூசை செய்துகொண்டு எடுக்க வேண்டும் என்பதிலிருந்து தெளிவாகத் தெரிகின்றது.

பொதிகை மலையுடன், இந்நூலாசிரியர் தொடர்புள்ளவர் என்பதும், இந்நூல் அங்கு எழுதப்பட்டிருக்கலாம் என்றும் புலனாகின்றன. இந்நூலில் சுத்திமுறைகள், பற்ப, செந்தூரம் மாத்திரை, திராவகம் என்பன கூறப்பட்டுள்ளன. இவைகள் பெரும்பாலும் இதுவரை அருகிய செய்முறைகள். இவற்றைக் கையாண்டு உண்மைகளைத் தெரிந்துகொள்ள முடியும். பல்வேறு வகையான புற்று களைப் போக்கும் என்று கூறப்பட்டுள்ளது. புற்றுகளின் பெயர்களைத் தெளிவாக இந்நூல் கூறுவதுடன், அவற்றைக் குணமாக்கும் மருந்துகளையும் கூறுகின்றது, இவற்றை எல்லாம் சித்த மருத்துவ வாரியம், சித்த

மருத்துவ இயக்கம், மற்றும் சித்தமருத்துவர்கள் கையாண்டு ஆராய வேண்டியது அவசியம்.

இந்நூல் வெளிவர நிதி உதவி அளித்த நடுவணரசுக்கும், மாவட்ட ஆட்சியாளர் மற்றும் சரசுவதி மகால் நூலக இயக்குநர் திரு. T. R. இராமசாமி, இ. ஆ. ப., அவர்களுக்கும், நூலக நிருவாக அதிகாரி (பொறுப்பு) திருவாளர் அ. பஞ்சநாதன், எம். ஏ, பி. லிப்சி., அவர்களுக்கும், தமிழ்ப் பல்கலைக் கழக சித்த மருத்துவப் பிரிவு இணைப்பேராசிரியை Dr. பிரேமா, எம். டி., அவர்களுக்கும் நூல் நன்முறையில் அமையத் திருத்தங்கள் செய்த தமிழாசிரியர் திரு. சொக்கலிங்கம், நல்லாசிரியர் புதுக் கோட்டை அவர்களுக்கும், நன்முறையில் அச்சிட்ட கஜேந்திரா அச்சகத்தார்க்கும் நன்றிகள் உரித்தாகுக,

**தஞ்சாவூர்**
***14—5—86***

**தங்கள்**
**ச. ரங்கராசன்**

# வேண்டுகோள்



கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள், அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனையோலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை, பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப் புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, "நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்" என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்,
25-11-2001.

மாவட்ட ஆட்சியர் மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

# அகத்தியர் (லோகமாரணம்) 110

*சொல்லுகிறேன் பொன்வெள்ளி[1] இரும்பு செம்பு
தோராத காரீயம் வெள்ளி யந்தான்[2]
சொல்லுகின்ற மித்திரத்தின் வகையைக் கேளு
கோமயமோர் காடியெண்ணெய் எருக்கம் பாலில்
நல்லபழச் சாறுகாணச் சாறு தன்னில்[3]
நலமான பொன்முதலா இரண்டும்[4] தோய்க்க
வெல்லரிய வங்கமொடு மூன்றுந் தீயில்
வேகமுடன் உருக்கிஅதில் சாய்க்க நன்றே. 1

சாய்த்திடுவாய் ஒவ்வொன்றில் காய்ச்சி முக்கால்
தான்தோய்க்கச் சரக்கிலுள்ள நிறம்பே திக்கும்
காய்ப்பேறி வலுவேறிச் சத்த லோகம்
களங்கமறும் நிசமான[5] சுத்தி யாகும்
வாய்ப்பான செந்தூரம் பற்ப மாகும்
வறுப்பதற்காம் களங்காகும் குருவுக் காகும்[6]
தீக்கிருக்கு முச்சிதங்கள் எல்லாம் ஆகும்[7]
செய்திடுவாய் சித்தாதி[8] முறைஇ தாமே. 2

---

* இறை வணக்கத்துடன் தொடங்காததால் இது முதல் பாடலாக இருக்க முடியாது.

1 இரும்பு
2 துத்தநாகமது மயான காரீயம் வெள்ளீயம் முதலாய்
3 நல்லதொரு சம்பீரச் சாறுதான் சாற்றில்
4 நவமான வெண்தேவி
5 சுகமான
6 நிசங் குருவேயாகும்
7 தீபாயம் வீழ்சதங்கட் கெல்லா மாகும்
8 சுத்தி சுத்தி

பொருள்: (பாடல் 1—2) பொன், வெள்ளி, இரும்பு செம்பு, வெள்ளியம், காரீயம், வெண்கலம் ஆகிய சப்த லோகங்களுக்கும் சுத்திமுறை கூறப்பட்டுள்ளது.

பொன். வெள்ளி, செம்பு, இரும்பு, காரீயம், வெள்ளியம் வெண்கலம் ஆகிய சப்தலோகங்களைத் தீயில் காய்ச்சி உருக்கி சாணப்பால். மோர், காடி, எண்ணெய், எருக்கம் பால், பழச்சாறு, கொள்ளுச்சாறு இவற்றில் சாய்க்க மேற் படி உலோகங்களின் நிறம் மாறுபட்டு சுத்தியாகும். இவை செந்தூரம், பற்பம், களங்கு, குரு முதலியவற்றிற்குப் பயன் படும் சித்தர்கள் பயன்படுத்தும் முதன்மையான முறை இதுவேயாகும்.

## தாமிர பற்பம் — தாமிரம் செந்தூரம்

தாமநிறைத் தாம்பிரத்தைத் தகடாய்த் தட்டித்
 தழல்காய்ச்சிக் குமரிபுளி இலைப்பொன் சாற்றில்
நேமமுடன் ஒவ்வொன்றி லெழுதரந் தோய்க்க
 நிசமான சுத்தியிது நறுக்கிக் கொண்டு
ஏமநிறக் கெந்திக்குக் கண்டெடை நன்றாய்
 எருக்கம்பா லிட்டரைத்துத் தகட்டி லப்பித்
தூமக்கா[1] உலைமூடிக் குள்ளே[2] வைத்துச்
 சோராமல் மேல்மூடிச் சீலை செய்யே. **3**

செய்துகச புடம்[3]போடப் பற்பந் தன்னைத்
 திரிபலைநல் கஷாயத்தில் பசுவின் பாலும்
நெய்யுடனே கற்றாழஞ் சாற்றி னாலும்
 நீட்டியரைத் தொவ்வொன்றாய்ப் புடநா லிட்டால்

---

1 காமலுனால்
2 தண்ணீரில்
3 தீப்புடம்

வெய்யதொரு கோபம்போம் பற்ப மாகும்
வெள்ளெருக்கம் பால்சிறுபுள் ளடியின் சாற்றில்
அய்யமில்லா தாவின்பால் வெள்ளாட் டின்பால்
அரிதான நூல்தாம ரைவேர்ச் சாறே. 4

சாறுரசம் பட்டைச்சா றுடனே தன்னில்
தனித்தவொவ் வோர் அரைத்துப் புடத்தைப் போடப்
பேரான அருணனைப்போல் செந்தூ ரிக்கும்
பிசகாது பிசகாது முறைபொய் யாது
மாறாமல் பால்பழநை வேத்தியஞ் செய்து
மாயிதனை நமஸ்கரித்துச் செந்தூ ரத்தைப்
பாராமல்[1] அனுபானத் துடனே கொண்டால்
மலபிணியும் காசமும்போம் அட்டி சொன்னோம். 5

தாமிரத்தைத் தகடாகத் தட்டி அனலில் காய்ச்சி கற்றாழைச்சாறு. புளியிலைச்சாறு, பொன்னாங்காணிச்சாறு இவை ஒவ்வொன்றிலும் ஏழுதடவை தோய்த்தெடுக்கச் சுத்தியாகும். சுத்தி செய்த தகட்டைச் சிறு துண்டுகளாக நறுக்கிக்கொள்ள வேண்டும். கந்தகத்தை எருக்கம்பால் விட்டரைத்து மேற்படி தகட்டிற்குப் பூசி ஒட்டிலிட்டு மேலோடு மூடிச்சிலை செய்து 1000 எருவில் புடமிட்டெடுக்கப் பற்பமாகும். இப்பற்பத்தை மேலும் திரிபலைக் கஷாயம், பசுவின் பால், நெய், கற்றாழைச்சாறு ஒவ்வொன்றிலும் நான்கு புடமிடச் சிறந்த பற்பமாகும்.

தாமிர பற்பத்தை வெள்ளெருக்கம் பால், சிறுபுள்ளடிச் சாறு, ஆவின் பால், வெள்ளாட்டின் பால், தாமரை வேர்ச் சாறு இவற்றில் அரைத்துப் புடமிடச் சிவந்தநிறச் செந்தூரமாகும். இச்செந்தூரத்தை மாயிமுன் வைத்து நைவேத்தியம் செய்து நமஸ்கரித்துப்பின் அனுபானத்துடன் கொண்டால் பல பிணிகளும், காசமும் தீரும்.

## சொர்ண பற்பம், செந்தூரம்

சொன்னத்தை நல்லசெம்மண் பொதிந்து சுட்டால்
சுத்தியாந் தகடுதட்டி யெவச்சா ரத்தை
நன்னயமாய்ப் பழச்சாறோ டரைத்துப் பூசி[2]
நலமான உலைமூடிக் குள்ளே வைத்துப்
பின்னுமே லுலைமூடிக் கொண்டு மூடிப்
பிசகாமல் சீலைமண் மூன்று செய்து
அன்னமின்ன கசபுடம்போட் டெடுத்துப் பார்க்க[3]
ஆச்சரியம் சொர்னபற்ப மாகும் பாரே. 6

பாரிந்தப் பற்பயெடை லிங்கம் கூட்டிப்
பதறாமல் யெருக்கம்பால்[4] அரசம் பட்டைச்
சாறுடனே நூல்தாம ரைவேர்ச் சாறும்
சாற்றரிய சிறுபுள்ளடியின் சாற்றால் நன்றாய்
நேருடனே நாற்சாம மரைத் துருட்டி
நேர்ப்பாக முன்போலே புடத்தைப் போடச்
சீரான பூரணசந் திரனைப் போலே
செந்தூரம் தின்றிடநோய் சிதறிப் போமே. 7

### அடுத்து சொர்ணபற்பச் செந்தூரங்களின் செய்முறைகள் விளக்கப்பட்டுள்ளன

தங்கத்தைத் தகடாகத் தட்டிச் செம்மண்ணில் பொதிந்து சுட்டெடுக்கச் சுத்தியாகும். எவச்சாரத்தைப் பழச்சாறு விட்டு

---

1 பார்மகனே
2 விட்டரைத்துப்பூசி
3 அடைவாய்ப் போட்டெடுக்க
4 எருக்கிலைப்பால்

அரைத்துத் தங்கத் தகட்டிற்குப் பூசி உலைமூடியில் வைத்து மேல்மூடி மூன்று சீலைமண் செய்து 1000 எருவில் புடமிட்டெடுக்கப் பற்பமாகும்.

இப்பற்ப எடைக்கு இலிங்கம் கூட்டி எருக்கம் பால் அரசம்பட்டைச்சாறு, தாமரை வேர்ச்சாறு, சிறு புள்ளடிச் சாறு இவை ஒவ்வொன்றிலும் நாலு சாமம் தனித்தனியாக அரைத்து வில்லைதட்டி முன்போல் கசபுடமிட்டெடுக்கச் செந்தூரமாகும். இதனால் நோய்கள் சிதறிப்போகும்.

## வெள்ளிப் பற்பம், செந்தூரம்

சிதறாமல் வெள்ளிதனைத் தகடாய்த் தட்டித்
திறமான மிதிபாகல் இலைச்* சாற்றில்
பதறாமல் ஏழுதரம் காய்ச்சித் தோய்க்கப்
பஞ்சுபோல் மெதுவாகும் முலைப்பால் தன்னால்
சதுருடனே கருத்தயவச் சாரந் தன்னைச்
சாதமாய் அரைத்தந்தத் தகட்டிற் பூசி
அதிராத உலைமூடிக் குள்ளே வைத்து
அசையாமல் முன்போலே புடத்தைப் போடே. 8

போட்டிடவே ரசிதமதுப் பற்ப மாகும்
புகழான பற்பவெடை லிங்கங் கூட்டிக்
காட்டில்வளர் கருவேலம் பட்டைச் சாறு
கதித்தெருக்கின் பால்புள்ளடிச் சாறாவின் பால்
நாட்டமுயர் நூல்தாமரை வேர்ச் சாறு
நன்றாக அரைத்து உலைமூடி வைத்துத்
தேட்டமுடன் கசபுடம் போட்டிடச் செந்தூரம்
தின்றிட நோய்சேராது செய மூண்டாகும் 9

* இழங்கு

அடுத்து வெள்ளிப் பற்பச் செய்முறை கூறப்பட்டுள்ளது

வெள்ளியைத் தகடாகத் தட்டிக் காய்ச்சி மிதிபாக லிலைச் சாற்றில் ஏழுதரம் தோய்த்தெடுக்கப் பஞ்சுபோன்று மெதுவாகும். எவச்சாரத்தைத் தாய்ப்பால் விட்டரைத்து மேற்படி தகட்டிற்குப் பூசி ஓட்டிலிட்டு மேலோடு மூடிக் கசபுடம் (1000 எரு) போட்டெடுக்க வெள்ளி பற்பமாகும்.

வெள்ளிப் பற்பத்திற்குச் சமஎடை லிங்கம்சேர்த்துக் கரு வேலம்பட்டைச் சாறு, எருக்கம்பால், புள்ளடிச்சாறு. ஆவின் பால், தாமரை வேர்ச்சாறு இவற்றால் அரைத்து முன்போலக் கசபுடமிட்டெடுக்கச் செந்தூரமாகும். இச்செந் தூரத்தைச் சாப்பிட நோய் சேராது. செயமும் உண்டா கும்.

## வெண்கல பற்பம், செந்தூரம்

செயமான வெண்கலத்தைக் காணச் சாற்றில்
தீக்காய்ச்சித் தோய்க்கவது சுத்தி யாகும்
நயமாகத் தகடுதட்டி நறுக்கிக் கொண்டு
நல்லகெந்திச் சமனெருக்கம் பால்விட் டாட்டிச்
சுயமான தகட்டிலப்பிப் புடமே லிட்டால்
சொல்லரிய வெண்கலந்தான் பற்ப மாச்சுக்
கயல்விழியே பற்பவெடை பாதி[1] லிங்கம்
கண்டுகொள்ளும் அதிற்பாதி கெந்தி தானே 10

கெந்தியெடை தன்னில்பாதி சூதங் கூட்டிக்
கெடியான ஆவின்பால் புள்ளடியின்[2] சாறு
அந்தரசம்பட்டை நன்றாய்க் காய்ந்த தண்ணீர்
அதினாலும் கருவேலங் கஷாயத் தாலும்

1 ஆதி
2 சிறுபுள்ளடி

முந்துபுரசம் பட்டைச்சாறு பழச்சாற் றாலு
மூர்க்கமுள்ள நூல்தாமரைச் சாற்றா லாட்டி
விந்தைவச்சிரக் குகையிட்டுப் புடத்தைப் போட்டு
மேலான செந்தூரம் வெகுநோய் போமே. 11

## அடுத்து வெண்கல பற்பம், செந்தூரம் இவற்றின் செய்முறை கூறப்பட்டுள்ளது

வெண்கலத்தை நெருப்பிலிட்டுக் காய்ச்சிக் கொள்ளுச் சாற்றில் தோய்க்கச் சுத்தியாகும். இதனைத் தகடாகத் தட்டித் துண்டுகளாக்கி, கெந்தகத்திற்குச் சமஎடை எருக்கம் பால் விட்டரைத்து மேற்படி வெண்கலத் தகட்டில் பூசிப் புடமிட வெண்கலம் பற்பமாகும்.

மேற்படி வெண்கலப் பற்பத்திற்குப் பாதி எடை லிங்கமும் அதில் பாதி எடை கந்தகமும், அதில் பாதி எடை இரசமும் சேர்த்துப் பசுவின்பால், சிறுபுள்ளடிச்சாறு, அரசம் பட்டை, கருவேலம் பட்டைக் கஷாயத்தாலும். புரசம் பட்டைச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு, தாமரைச் சாற்றாலும் அரைத்து வச்சிர மூசையில் வைத்துப் புடம் போட்டெடுக்க வெண்கலச் செந்தூரம் கிடைக்கும். இதனால் பல நோய்கள் போகும்.

## அயச்செந்தூரம்

போமென்ற அரப்பொடியைப் பழச்சார் வார்த்துப்
புகழாக மூன்றுநாள் ஊறப் போட்டு
நாமென்ற உரசிஅதைக் கழுவி யேதான்
நல்லவா லாசத்தி நவ்வப் பட்டை
ஆமென்ற கரிசிலாங் கற்றாழைச் சாற்றால்
அடவாக ஒவ்வொருநாள் ஊறித் தீர்த்துத்
தாமென்ற உலைமூடிக்குள்ளே வைத்து
தணியாமல் கசபுடம்போட் டெடுத்து வாங்கே. 12

எடுத்தேதான் அப்படியே புடமுன் றேத்து
ஒக்கவே அருணனோடு[1] செந்தூ ரத்தைக்
கொடுத்துவர திரிகடுகு பொடியில் தேனில்
கொடுக்க சலக்கழிச்சல் சோகை பாண்டு
வடுத்தஇளைப் பிருமல்கா மாலை வீக்க
அத்திசுரம் சத்திபித்த மனைத்து[2]க் குன்மம்
விடுத்தேகும் அனுபானம் விசேஷத்தால்
மேலான கிராணியும்[3]போ மிதுதப் பாதே[4] 13

**செய்முறை:** அயப்பொடியை எலுமிச்சம் பழச்சாற்றில் மூன்றுநாள் ஊறவைக்க வேண்டும். பின் அதை உரசிக் கழுவ வேண்டும். கழுவி எடுத்துக்கொண்டு, வாலேந்திரப் பட்டை, நாவல்பட்டை, கரிசிலாங்கண்ணி, கற்றாழை இவற்றின் சாற்றில் தனித்தனியே ஒவ்வொரு நாள் ஊற வைக்க வேணடும். பின்னர் உலர்த்தி, உலையில் இட்டு மேல்மூடி, கஜபுடம் மூன்று தரம் போட்டு எடுத்துக்கொள்ளவும். இதுவே அயச் செந்தூரம் ஆகும்.

**அனுபானம்:** திரிகடுகுபொடி, தேன்

**தீரும் வியாதிகள்:**

| | | | |
|---|---|---|---|
| 1 | சலக்கழிச்சல் | 7 | வீக்கம் |
| 2 | சோகை | 8 | அத்திசுரம் |
| 3 | பாண்டு | 9 | சத்தி |
| 4 | இளைப்பு | 10 | பித்தம் |
| 5 | இருமல் | 11 | அட்டகுன்மம் |
| 6 | காமாலை | 12 | கிராணி |

---

1 அருள் ஒளி 2 படுத்து
3 இருமியும் 4 பொய்யாதே

## பித்தளைப் பற்பம்

துப்பாமதே பித்தளைத்தூள் நொச்சிச் சாற்றிற்
வெறுமனே மூன்றுநாள் ஊறப் போட்டுத்
துப்புரவாய்ச் சட்டியிட்டு அடுப்பி லேற்றிச்
சுவற வறுத்திடு கடிகை யார்தாக
ஒப்புரவாய் எடுத்ததிலே சிலையுங் கெந்தி
ஊட்டுபழச் சாற்றிலரைத் தொன்றாய்ச் சேர்த்துச்
செப்பரிதா கசபுட இட் டிட்டால் அந்தத்
தெளிவான அடிக்களையின் பற்ப மாங்கே. 14

**செய்முறை:** பித்தளையினை நொச்சிச் சாற்றில் மூன்று நாள் ஊறப்போட்டு. சுத்திசெய்துகொள்ள வேண்டும். பின்னர்ச் சட்டியிலிட்டு, அடுப்பிலேற்றிக் கடிகைக் காலம் வறுத்திடவேண்டும். பிறகு சமஅளவு மனோசிலை கந்தகம் சேர்த்து எலுமிச்சம்பழச் சாற்றில் அரைத்தெடுத்து கஜபுடம்போட்டு, எடுக்க அடியில் பற்பமாக இருக்கும்.

## கருவங்க செந்தூரபற்பம்

வாங்குகா ரீயமது மலந்தான் ஒன்று
மடிவாக சுத்திசெய்து சட்டி தன்னில்
பாங்குபெற்ற தொடையுட[1] கம்பு கொண்டு
பண்பாக வேர்பொறாது வறுக்க பற்பம்
ஆமாங்காகு மத்தன்சாறு[2] புடமூன் றேத்த
மட்டும் கொட்டான் கரந்தைபுட மூன்றேத்து[3]
ஓங்குநல்ல வெற்றிலைச்சாறு புட மூன்றேத்து
ஒழிவான செந்தூரம் உண்மை தானே. 15

---

1 ஆடாதோடை தன்னை 2 சம்பழந்தான் 3 பத்து

**செய்முறை:** கருவங்கத்தைப் பலம் ஒன்று எடுத்துக் கொள்ள வேண்டும். முறையாகச் சுத்தி செய்தபின் சட்டியி லிட்டு, ஆடாதோடையின் கம்புகொண்டு கிளறி வறுக்க வேண்டும். இவ்வாறு வறுத்திடப் பற்பமாகும்.

மேற்படி சுத்திசெய்த கருவங்க கட்டியை, மத்தன்சாறு கொண்டு. அரைத்து மூன்று புடம் இடவேண்டும். கிடைத்த பொடியை, மீண்டும் கொட்டக் கரந்தைச்சாறு வெற்றிலைச்சாறு என்பவற்றில் அரைத்து, தனித்தனியாக மூன்று புடம் வைக்கவேண்டும். மூன்று புடம் முடிவில் உள்ள பொடியை எடுத்து வைத்துக்கொள்ளவும். இதுவே கருவங்கச் செந்தூரம் ஆகும்.

## வெள்வங்கப் பற்பம், செந்தூரம்

உண்மைதரு வெள்ளியம் பலந்தான் ஒன்று
ஒட்டிலிடக் குணாயுருவி கரந்தை[1] யாலே
வெண்மையதாகக் கடிகை முப்பது ஆகு மட்டும்
விதமாகத்[2] தேய்த்திடவே பார் இத்
தன்மையாய்ப் பற்பத்தை[3] விட்டுச்
சன்னி அரைய கல்லிலிட்டுச் சீலை செய்து
கண்மணியே மூன்றுபுடம் போட்டாயானால்
கனகம்போல் செந்தூர மாகிப் போமே. 16

**செய்முறை:** நாயுருவிச்சாறு, கரந்தைச்சாறு இவற்றை அடுப்பிலேற்றிச் சூடுபடுத்த வேண்டும். வெள் வங்கம் 1 பலம் எடுத்துக்கொண்டு, மேற்படி சாற்றில் 30 கடிகை தோய்த்து எடுத்துக்கொள்ள வேண்டும். இது பற்பமாகும்.

---

1 ரசத்தை 2 மிதமாக 3 பனஞ்சாறு

மேற்படி, பற்பத்தைக் கல்வத்தில் இட்டுச் சன்னமாக அரைத்துக்கொண்டு சீலைமண் செய்து மூன்று புடம் எரித்து, எடுத்துக்கொள்ள வேண்டும். இதுவே செந்தூர மாகும்.

## காந்தப் பற்பம், செந்தூரம்

ஆகியதோர் காந்தத்தைப் பழச்சாறு மோர்
 ஆறுதிங்கள் காடியிலும் கடிகை இரண்டு
வேகமுடன்தான் ஒன்றிலும் ஊறப் போட்டு
 வெளியில்[1] வைக்கச் சுத்தியதாம்[2] நாலத் தொன்று
பாகமுடன் மகந்தகம் சேர்த்து[3] எருக்கம் பாலில்
 பண்பாக வெள்ளறுகுச் சாற்றா லாட்டு
வாகுபெற[4] அரசம்பட்டைச் சாறு விட்டு
 மலையாமல் புடமூன்றில்[5] பற்ப மாச்சே 17

ஆச்சிந்தப்[6] பற்பனடை பாதி லிங்க
 அடைவாகக்[7] கல்வத்தி லேத்திக் கொண்டு
வாச்சியது காஞ்சோறி யின்சாறுவிட்டு[8] வாட்டி
 வழித்ததைச் செம் மண்[9] குகையில் வைத்துமூடி
உச்சிதமாய்ச் சீலைமண் ஏதுவாய் வைத்து
 உயர்புடமாம் கசபுடம்மூன் றிந்தச் சாற்றால்[10]
காய்ச்சஒரு தேவியைநீ[11] பூசை பண்ணிக்
 காந்தத்தைப் புடமிடச்செந் தூரம் தானே. 18

---

1 வெய்யில் 2 சுத்தியானால் தோன்றும். 3 ஒருசேர
4 வாகுடனே 5 புடத்தில் 6 ஆச்சப்பா 7 மடலாக
8 விட்டிட்டில் 9 செப்புகுகை 10 திம்பச்சாறு 11 தருந்தேவி

தான்என்ற செந்தூரம் குன்றி உண்ணச்
சலக்கழிச்சல் காமாலை பாண்டு வாயு
ஊன்என்ற வாதபித்தம் காச ஈளை
உதிரவலி குளிர்ச்சி[1] பெரு வயிறு மூலம்
வாமென்ற[2] பீலிகை அட்டகுன்ம என்ற பீலிகை
அட்டகுன்ம இளைப்பு வலிப்புடன் களைப்பறுத்துத்[3]
தேன்மொழியே அனுபானம் அறிந்து செய்தால்
தீராத பலநோவும் தீரும் பாரே.

**செய்முறை:** காந்தப்பொடியைப் பழச்சாறு, மோர் இவற்றில் ஆறு மாதம், தினம் இரு கடிகை ஊறவைத்து எடுக்கச் சுத்தியாகும்.

இத்துடன் 4இல் 1 பங்கு கந்தகம் சேர்த்து, எருக்கம் பால், வெள்ளறுகுச்சாறு, அரசம்பட்டைச் சாறு என்பனவற்றில் ஆட்டி மூன்று புடமிடப் பற்பமாகும்.

மேற்படி பற்ப எடைக்குப்பாதி இலிங்கம் சேர்த்துக் கல்வத்திலிட்டுக் காஞ்சோறிச்சாறு விட்டு ஆட்டி, வழித்தெடுத்துக்கொண்டு, வெள்ளறுகுச்சாறு, அரசம்பட்டைச் சாறு இவற்றில் காய்ச்சி எடுத்துக்கொண்டு, செம்மண் குகையில் கவசமிட்டுக் கஜபுடம் இட்டு, தேவியைப் பூசை செய்து எடுத்துக் கொள்ளவும். இதுவே காந்தச் செந்தூரம் ஆகும்.

---

1 கவிசை

2 மேனிவற்றும் மூலிகை அட்டதாம்

3 துளைச்சன்னி

**தீரும் பிணிகள் :**

| | | | |
|---|---|---|---|
| 1 | சலக்கழிச்சல் | 7 | ஈளை |
| 2 | காமாலை | 8 | உதரவலி |
| 3 | பாண்டு | 9 | பெருவயிறு |
| 4 | வாயு | 10 | மூலம் |
| 5 | வாதபித்தம் | 11 | பீலிகம் |
| 6 | காசம் | 12 | அட்டகுன்மம் |

அளவு; குன்றிமணி எடை

அனுபானம்: தக்கபடி

## நாகச்செந்தூரம்

சீறிடவே நாகமென்ற செந்தூ ரத்தைச்
செப்பினேன் நாகமது பலந்தான் ஒன்று
காரசத்தின்[1] பாலிலுப்பை நெய்ய தொன்றில்
கடுகவி ரைந்துதான் உருக்கிச் சாய்த்துப்
பாருசெய்த மாதளம்பூ நிறமேயாகும்
பண்பாக அயச்சட்டி தன்னில் போட்டு
நேராக வயச்சட்டி[2] கொண்டு சொன்ன[3]
நெய்தடவி மெல்லமெல்ல வறுத்தி டாயே. 20

வறுப்பதாகு மேற்பொடியைக் கேளு கேளு
வளையலுப்பும் படியரைதான் மஞ்சள் தானும்
நிறுத்தபொடி பலமரைத்தா னும்பிற[4] சேர்த்து
நினைவாகச் சிறுகத்தூள் பொடியைப் போட்டு

---

1 காருர சாத்தி
2 அயக்கரண்டி
3 போல
4 தான் உப்பில்

ஒறுக்காமல் வறுத்திடுவாய் பேர்தீய்ந்[1] தக்கால்
உற்றசெந் நாயுருவி சமூலங் கண்டித்து
முறுக்கமுடன் சிறுகவிட்டுச் சிவப்பா மட்டும்
மூசியாமல் வறுத்திடச் செந்தூரம் ஆச்சே[2] 21

ஆச்சிந்தச் செந்தூரம் பணத்துக்[3] குத்தான்
தூக்கிஅனு பானமறிந் துண்ணப்[4]
போச்சுவலி குன்மஎரி குன்ம காசி
புண்சூலைப்[5] பாண்டுகுட்டம்[6] குமுழ மேகம்
காய்ச்சல்குளிர் மந்தாரம் காச சுவாசம்
காணாத[7] உள்மூலம் எண்பான் வாதம்
பிய்ச்சுகின்ற கிராணியுடன் மேக வியாதி[8]
பிலிகைகா[9] மாலைசத்தி போகும் காணே. 22

**செய்முறை:** நாகச்செந்தூரம் செய்யும் முறையைக் கூறுகின்றேன். ஒரு பலம் நாகக்கட்டியை எடுத்துக் கொண்டு காராம் பசுவின் பால், இலுப்பை நெய் இவற்றில் உருக்கிச் சாய்த்து எடுத்து, வெட்டையாக்கிக் கொள்ளவும். இதுவே சுத்தியாகும்.

அயச்சட்டியில் இலுப்பை எண்ணெய் சிறிது தடவி வளையலுப்பு அரைப்படி. மஞ்சட்பொடி அரை பலம் சேர்க்க வேண்டும். பின்பு அயச்சட்டியில் இட்டு வறுக்க வேண்டும். மாதளம்பூ நிறம் வந்தவுடன் எடுக்கச் செந்தூரம் ஆகும். மேற்படி பொடியானது தீய்ந்துவிட்டால் நாயுருவி சமூலச் சாற்றில் சூடாக்கித் தோய்த்து எடுத்து சிவப்பு நிறம் வருமளவு வறுக்கச் செந்தூரம் ஆகும்.

---

1 பொடி  2 ஆமே  3 பணத்துக்குத்தான்
4 காசநோய்  5 சூலைப்பாண்டு  6 குடல் குமுடி
7 மேகவியாதி  8 பிலிகைகள் மாலை  9 ஓடுங்காணே

அளவு: பண எடை

அனுபானம்: தக்கபடி

**தீரும் நோய்கள்:**

1 வலிகுன்மம்
2 எரிகுன்மம்
3 சூலை
4 பாண்டு
5 குட்டம்
6 மேகம்
7 காய்ச்சல்
8 குளிர்
9 மந்தம்
10 சுவாசகாசம்
11 உள்மூலம்
12 எண்பது வாதம்
13 கிராணி
14 மகா வியாதிகள்
15 பீலிகை
16 காமாலை
17 வாந்தி

## மிருதார்சிங்கிப் பற்பம்

காணுமிரு தாசிங்கி பலந்தான் ரெண்டு
கல்வத்தில் உன்னிமையாய்ப் பொடித்துக்[1] கொண்டு
வேணுமென்ற பீங்கானில் பழச்சாறு வார்த்து
மேலான பொடிஎல்லாம் கலக்கி வைத்துத்
தோணுரவி தனிலேழ்நாட் காய்ந்து தானாய்த்
துவங்கவே பாவாடை போலக்[2]கட்டு
மூணாவது கண்டறிந்து சார்வி டாமல்
உலர்த்திஅதில் பலம்எடுத்துச் சட்டிக் கேற்றே. 23

சட்டிக்கு மேல்சட்டி கொண்டு மூடிச்
சாதகமாய்ச் சீலைமண்ணேழ் செய்தபின்பு
திட்டமுடன் சாணிபதங் கமதாய்த் தப்பித்
தீஎரிக்கச் சாமத்தின் மேலே பற்று

1 பொடியாய்ச் செய்து 2 கட்டுடன் கண்டறிந்து

மிட்டமுடன் வழித்தெடுத்துச் சிமிழில் வைத்து
இலங்கிய[1] பொன் வெள்ளித்தா மிரங்கள்[2] தன்னில்
சட்டமதாய்க்கேள்[3] இக்கழஞ்சு பற்பந் தன்னைத்
தடவிரவி தன்னில்வைக்கப் பற்ப மாமே. 24

பற்பமதாம் பற்பமப்பா தப்பா திந்தப்
பாரிதிலே அரோசியமும் இல்லை[4] இல்லை
அற்பசொற்ப மல்லஇது சுருக்கு மொத்த
அனுபான[5] மறிந்துண்ணக் காசம்[6] எட்டும்
கெர்ப்பமதி டைங்கு குன்ம மெட்டும் பொல்லாக்
கீழ்க்கவிசை மேற்கவிசை சீத சன்னி[7]
மற்பொருமந் தாரசன்னி வலிபீ ரோணி
மாய்ந்தோடும் காதங்கள் வண்மை கேளே. 25

செய்முறை: இரண்டுபலம் மிருதாசிங்கியை எடுத்துக் கொண்டு மைபோல் கல்வத்திலிட்டு, அரைத்துக்கொள்ள வேண்டும். மேற்படி பொடியுடன் எலுமிச்சம்பழச்சாற்றைக் கலந்துகொண்டு, சூரியபுடத்தில் வைக்க வேண்டும். உலர்ந்தவுடன் அதில் பலம் எடுத்துச் சட்டியில் போட்டுச் சீலை மண்ணால் மூடிச் சாணியை அப்பிச் சாமம் தீ எரித்து எடுத்துக்கொள்ள வேண்டும். மேற்படி பொடியைப் பொன் வெள்ளி. செம்புத் தகட்டில் வைத்து, மீண்டும் சூரியப் புடத்திலிட்டு எடுத்துக் கொள்ளப் பற்பமாகும்.

அனுபானம்: தக்கபடி

---

1 விளங்கிய 2 தாம்பிரந்தன்னில் 3 தகட்டுத் தகடினில் 4 பற்பம் சொற்பமல்ல 5.... ...அனுபானம் 6 போம்காசம் 7 சன்னி சீதமா

**தீரும் நோய்கள்:**

| | | | |
|---|---|---|---|
| 1 | அரோசியம் | 6 | சீத சன்னி |
| 2 | எட்டுவித குன்மங்கள் | 7 | மந்தாரம் |
| 3 | எட்டுவிதமான காசங்கள் | 8 | சன்னி |
| 4 | கீழ்க்கவிசை | 9 | வலி |
| 5 | மேற்கவிசை | | |

## அரிதாரப் பற்பம்

வளமைதிகழ்[1] அரிதார பற்பந் தன்னை
வடிகொள்ளுத் தண்ணீருறச் சுண்ணியனார்
பழமைபெறத் தோலாந்திரமாகத் தூக்கிப்
பற்றிஎரித்திடவே சுத்தி யாகும்[2]
குழையரைத் திடப்புரசம் பட்டைச் சாற்றால்
கூசாமல் நாற்சாமம் அடைபோல்[3] தட்டி
இடித்தபடை[4] அடக்கி அடை வைத்தடை
மேற் அடைவை அவையே. 26

பட்டைவைத்துச் சட்டிமேற் சட்டி மூடிப்
பார்த்து நன்றாய்ச் சீலை[5] மண்ணோன[6] செய்துபின்பு
கட்டிஅடுப் பேற்றி மெல்ல மூத்தீபத்தை
கண்டுபங்கு[7] மூன்றுதினங் கதறி டாமல்

---

1 வளமை திகழ்சித்தார பலகை தன்னை 2 வெற்றி யாகும் 3 அடைதட்டி 4 அளவாகச் சட்டிதனில் தேடு 5 இடித்த அனுட வைத்த அடைமேல் பட்டை வையே 6 பச்சிலை 7 மண் எண்வகை

ஒட்டி[1] எரித்த தார்விட்டுப் பூசைபண்ணி
உற்றுப்பார்[2] தும்பைப்பூ நிறம்ஒவ் வாது
மட்டங்கள்[3] வேகமிது பற்பம் சொன்னேன்
மஞ்சாடி உண்டுதினம் கண்டு பாரே. 27

கண்டுபார் தாளகத்தைச்[4] சுத்தி செய்து
கடிகைமுப்ப தாகஇலைக் கள்ளிப் பாலில்
உண்டி[5] அரைத் தெடுத்ததனைக் குப்பி கத்துச்
சாமுண்டி தனைப்பணிந்து[6] முத்தீ பத்தை
அண்டிஎரித் திடுசாம மூன்று[7] மட்டும்
ஆறிய[8] பின் பெடுத்தடைத்து வைத்துக் கொண்டு
பண்டுவினை தனைஅகற்றி[9] அனுபா னத்தில்
பத்தியமாய் உண்டுவரப் பலன்உண் டாமே, 28

**செய்முறை;** அரிதாரத்தைக் கொள்ளுத் தண்ணீரில் ஊறவைத்து, முடிச்சுக்கட்டித் தோலாந்திரமாக எரித்து எடுத்துக்கொள்ளச் சுத்தியாகும்.

சுத்தியான அரிதாரத்தைப் பின் புரசம்பட்டைச் சாற்றில், சாமம் அரைத்து, அடைபோலாக்கிச் சட்டியிலிட்டு மேற்சட்டி கொண்டு மூடி, சீலை மண்ணால் கவசம்செய்து மெல்ல எரித்து எடுக்கப் பற்பம்.

**வேறு:** தாளகத்தைச் சுத்திசெய்து, மூப்பது கடிகை அரைத்துக் கொள்ளவும். குப்பியிலிட்டு, மூன்று சாமம் எரித்தெடுக்கப் பற்பம்.

---

1 தனம் கதறிடாமல் 2 உறவப்பா 3 மட்டங்கா
4 தாளகந்தான் 5 தட்டி அரைத்தெடுத்திறமாய்
6 தாள் 7 சாம மூன்றாக 8 ஆறின 9 அகற்றி

**தீரும் நோய்கள்:** பழம் பிணிகள் போகும்

**அளவு:** மஞ்சாடி

## ரசப் பற்பம்

பல்ன் உண்டாகும் சூதமது பலந்தான் ஒன்று
பாண்டத்துள் நாழிஉப்புக் குவியல் வைத்துப்[1]
பலமான சிற்றகலில் சூதம் வார்த்துப்
பிறழால் உப்புமெலிதாய் ஆட்டிக்[2]
கலமாகக் கவிழ்த்திடு[3]மேல் பாண்டத் துள்ளே
கசக்கியே வெற்றிலைச்சாறு......டிக்குக்
குலமாகச் சந்துவாய்ச் சீலை செய்து
குணமாகச் சிறுதீயாய்[4] எரித்தி டாயே 29

எரித்திடுவாய் கடிகைமுப்ப தாகு மட்டும்
எரித்திறக்கு மேற்சட்டி தலைகீ ழாகச்
சரித்திறமாய் ஆறவிட்டு மேலே பற்றும்
தவளநிறப் பற்பத்தை வழித்தெ டுத்துப்
பிரித்துளபோற் கைமுறைதப் பாமல் நீதான்
பேரினை மூன்றுதர மடக்கி வைத்து
எரித்தெடுத்துச்[5] சிமிழிலிட்டுக் கொண்டு சற்றே
அப்பனே பனைவெல்லந் தன்னில் உண்ணே. 30

உண்ணயிலே ஏழாம்நாட் சூலை கட்டி
ஓடுமே அளவற்ற தண்ணீர் வாயில்
புண்ணாகக்[6] கருவேலம்[7] பட்டைத் தண்ணீர்
நலமாகக் கொப்பளிக்க[8] வாய்வீக் கம்தணியும்

---

1 உப்புக்கு வாய்வைத்து 2 நாட்டி 3 அவித்திடு
4 தீபமாய் 5 அரித்தெடுத்து 6 நன்னா 7 கருவெல்லம்
8 அடுப்பேற்றிக் காயவைத்து

பண்ணாக[1] இருந்தெல்லாம் வாட்டம் தீரும்
போக்கறிந்து உண்ணாக இளவெந் நீரப்பா
சுண்ணாக ஒன்றைவிட்டே ஓர்நாள் தானும்
தப்பாமல் முழ்கிவர இன்னம் கேளு. 31

இன்னங்கேள் எண்ணெய்த்தொட்டு முழுக்கு மூன்றும்
இப்படியே முழுகிவர நிமிரத் தேய்த்து
நன்னயமாய் அப்பிட்டு வாரந் தோறும்
நன்றாக மண்டலந்தான் முழுகு வாய்நீ
அன்னமுண்ணப் பத்தியங்கேள் வறுத்த உப்பு
ஆவினமோர் ஈரவெங் காய மாகும்
சொன்னமொழி தவறாமல் சாதிப்போர்க்குக்
குழப்பவினை[2] வாராது தூரப் போமே 32

தூரப்போம் குறைநோவு நாசிப் புண்கள்
தொடைவாதங் கள்வாத சூலை[3] மேகம்
நேரொத்த பவுத்திரப்புண் அண்டப் புற்று
நிலையான கண்ணோசி கண்ட மாலை
சிர் கெட்ட புற்றரைப்புண்கள்[4] தானும்
சேருது சேருது தேகம் கட்டி[5]
வார்க்கட்டு முலைமானார்[6] மாயை ஆகா
மண்டலத்துக் கப்பாலாம் அப்பால் வரிசைபாரே. 33

**செய்முறை:** பாண்டத்தில் நாழி அளவு உப்புக் குவியலை வைக்கவும். ஒரு பலம் ரசம் எடுத்துச் சிறிய

---

1 எண்ணாக ஒன்றை விட்டர் 2 துவளம் 3 அல்லா தருசூலை 4 புற்றுஅரையாப்புப்பிற 5 கெட்டி 6 முலைமாது

மண் அகலில் ஊற்றி மண் அகலை உப்புக் குவியலில் வைக்கவும். மேல் மூடியை, ஒரு படி வெற்றிலைச் சாற்றால் பூசவேண்டும். மூடியால் உப்புக்குவியலை மறைத்துச் சீலைமண் செய்து உலர்த்திச் சிறு தீயாக 30 நாழிகை நேரம் எரிக்கவேண்டும். ஆறினபின், மேல் மூடியைக் கவிழ்த்துப் பதங்கமாய் உள்ள வெண்ணிற பற்பந்தன்னை எடுத்து வைத்துக்கொள்ள வேண்டும்.

**அனுபானம்:** பனைவெல்லம்

**கால அளவு:** மண்டலம்

**தீரும் நோய்கள்:**

| | | | |
|---|---|---|---|
| 1 | குறை நோய்கள் | 6 | பவுத்திரப்புண் |
| 2 | நாசிப்புண் | 7 | அண்டப்புற்று |
| 3 | தொடைவாதம் | 8 | கண்ணோசி |
| 4 | வாதசூலை | 9 | கண்டமாலை |
| 5 | மேகம் | 10 | அரையில்உள்ளபுண்கள் |

**பத்தியம்:** வறுத்த உப்பு, ஆவின்மோர், ஈரவெங்காயம் உண்ணலாம். பெண் உறவு கூடாது.

**குறிப்பு:** வாயில் புண்கள் ஏற்பட்டால், கருவேலம் பட்டையைத் தண்ணீரிலிட்டு, அதன் நீரைக் கொப்பளிக்கவும். இதனால் வாய்ப்புண்கள் வீக்கம் தீரும். எண்ணெய் தேய்த்து இளவெந்நீரில் நீராட வேண்டும்.

## பவழப் பற்பம்

வரிசைபெறும் பவழத்தைப் பழச்சாறு தன்னில்
மத்திக்க சுத்தியதை[1] எருக்கம் பாலில்
பிரிசமுடன்[2] மூன்றுநா ளரைத்து வாங்கிப்
பலத்தஉலை மூடியினிற் புடத்தைப் போடப்பா[3]
அரிது பற்பந்தான்ற ரளந்தான் சங்கம
பழச்சாற்றில் இரண்டுநாள் ஊறப் போட்டுத்[4]
தெரிமுள்ளிப் பழச்சாற்றி லரைத்து நன்றாய்த்
தீர்க்கமுடன்[5] புடம்போடப் பற்ப மாச்சே. 34

**செய்முறை:** நற்பவழத்தை, எலுமிச்சம்பழச் சாற்றில்விட்டு மத்திக்க சுத்தியாகும். சுத்தியான நற்பவழத்தை எருக்கம்பாலில் மூன்று நாள் அரைத்து, உலையில் இட்டுப் புடம் போடவும். கிடைத்த பொடியை மீண்டும் சங்கம் பழச்சாற்றில் 2 நாள் ஊறப்போட்டு, முள்ளிப்பழச்சாற்றில் அரைத்துப் புடமிடப் பற்பம் கிடைக்கும்.

## வைரப் பற்பம், மரகதப் பற்பம்

ஆச்சு நல்ல வஜ்ஜிரத்தைக் குதிரை நீரால்
அன்பாக மூன்று நாள் வெய்யில் வைத்துக்
காய்ச்சுபிரண்டைச்சாற்றில் ஓர்நாள் ஊறில்
கைமுறையாய்ப் புடம்போடப் பற்பம் செய்
பூச்சி[6] தஞ்சேர் பச்சை மரகதத்தைப் பேய்க்குமட்டி
யுட கிழங்கிலிட்டு மண்செய் உலரவைத்து
மாச்ச[7] வில்லைக் குக்குடமாய்ப் புடத்தைத் தீர்த்து
வாங்கு கண்டங் கத்தரிச்சாறு வெள்ளறுகிலாட்டே 35

---

1 சுத்தி சுத்தி 2 பிரியமுடன் 3 போட்டு
4 வாங்கு 5 திறமுடனே 6 உச்சிதரு 7 மச்ச

ஆட்டிஉலை மூடிவைத்துப் புடத்தைப்[1] போட
அடைவான பற்பநல்ல குதிரை நீரில்
போட்டுயர் நீலத்தை[2] வெய்யில் தன்னில் வைத்துப்
பொருந்து கலைக்கோடு[3] சாற்றில் மூன்று நாள்தான்
வாட்டமுற ஊறவைத்துக் குகையில் இட்டு
மண்செய்து கொல்உலையில் ஊதப் பற்ப
மூட்டுசிவப் பண்புரவி[4] மூத்திரத்தின்
மூன்றுநாள் வெயில்வைத்துக் கழுவிப்போடே. 36

கழுவி இதைப்பின்[5] எருக்கிலைப்பால்[6] மூன்றேதனில்
கழித்து ஊறிப்புட[7] ஊதிப் பற்ப மாகும்
முழுகாமல்[8] புடபாகத்தை[9] ஆட்டின் சாற்றில்[10]
முன்போலக் கொல்உலையில் ஊதப் பற்பம்
பழுதில்லாக் கோமேத[11]கத்தை நீரில்
பாங்காக மூன்றுநாள் ஊறவையே. 37

**செய்முறை:** நல் வைரத்தைக் குதிரைநீரில் ஊற வைத்து மூன்று நாட்கள் சென்று எடுக்கவும். அதனைப் பிரண்டைச் சாற்றில் ஒருநாள் ஊறவைத்துக் கை முறையாய்ப் புடமிடப் பற்பமாகும்.

மரகதத்தைப் பேய்க் குமட்டிச் சாற்றில் ஆட்டி, உலர வைத்து. வில்லையாக்கிக் கோழிப் புடமிடவேண்டும். எடுத்த பொடியுடன், கண்டங்கத்தரிச்சாறு, வெள்ளறுகுச் சாறு இவற்றில் ஆட்டி, உலையில் இட்டுச் சிலைமண்

---

**1 போட்டவன் 2 பாரிலந்த 3 கொடுசீலைச்சாற்றில் 4 ரவிமுகத்தில் 5 பின்எடுத்து 6 எடுத்து 7 கஸ்தூரி போட்டாக்கால் 8 வழுவாமல் 9 புட 10 வாரிதன்னில் போட்டு வெய்யிலில் வைத்து எடுத்து முழுவதும் வெள்ளெருக்குத் துச்ச புத்தில் 11 மெத்த குதிரை நீரில்**

செய்து, எரித்து எடுக்கவும். எரித்து எடுத்த பொடியைக் குதிரை நீரிலிட்டு. ஊறவைத்துச் சூரியப் புடம் வைத்துப் பின்பு மான் கொம்பு நீரில் மூன்று நாள் ஊறவைத்து 4ஆம் நாள் குகையிலிட்டு ஊதி, எரித்து எடுக்கப் பற்பம் ஆகும்.

**வேறு:** சிவப்புக் குதிரை நீரில் மரகதத்தைப் போட்டுச் சூரிய புடம் மூன்று நாள் வைத்துக் கழுவி எடுத்து, எருக்கம் பாலில் ் நாள் ஊறவைத்தும் புடமிடப் பற்பம்.

**வேறு:** மரகதத்தை ஆட்டின் நீரில் போட்டுச் சூரிய புடமாக மூன்று நாள் வைத்து எடுக்கவும். பின்னர் அதனை உலையில் வைத்து, எரித்து, ஊதி எடுக்கப் பற்பம்.

## கோமேதகப் பற்பம், வயிடூரியப் பற்பம்

ஊறவைத்த பின்பு நிலக்குமிழஞ்[1] சாற்றில்
ஊறிஒரு நாள்கருஊ மத்தம் சாற்றில்
சேரஒரு நாள்ஊறிக் குகையில் இட்டுத்
திறமாக ஊதியிடப் பற்ப மாகும்
பாருவயி டூரியத்தைப்[2] பீளைச் சாற்றில்
பண்பாக ஊறிஎடுத் தரைத்த ரைத்து
நேருடனே குகையிலிட்டுப் புடமூன் றிட்டால்
நிசமான பற்பமுத லாதி யாமே. 38

**செய்முறை:** கோமேதகத்தைத் தண்ணீரில் மூன்று நாள் ஊறவைத்தபின். இளம் எலுமிச்சம் சாற்றில் ஒருநாள்

---

1 குமிழஞ்சாற்றில் 2 வஜ்ஜிரத்தை

ஊறவைத்து எடுத்துக்கொள்ளவும். பின் கருஊமத்தை இலைச் சாற்றில் ஒருநாள் ஊறவைத்துக் குகையிலிட்டு எரித்து எடுக்கப் பற்பமாகும்.

வயிடூரியத்தைச் சிறுபீளைச் சாற்றில் ஊறவைத்து எடுத்து, எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்துக்கொண்டு புடமிடப் பற்பமாகும்.

## ரசச்செந்தூரம், வைரவன் மாத்திரை

ஆதிரசச் செந்தூர வைப்பைக் கேளு
அப்பனே வாலரச[1] கழஞ்சு பத்து
சாதிநல்ல கெந்தக ஏழு கழஞ்சு
தாக்கவரு[2] மற்றொருநசித்துப் பற்ப மாக்கி
ஏதுவதாய்க் குப்பிக்குச் சீலை மண்ணே[3]
இனிதாகாகச் செய்துலர்த்திப் பல பொடித்தூளைப்
பாதியிலிட்டுக் குப்பிவாய் மரத்தால் மூடிப்
பாண்டத்தில் நாலுவிரல்மண் பரப்பிப்[4] போடே. 39

பாவமணல் மேற்குப்பி[5] வைக்கு மட்டுக்குப்
பார்த்துமணல் மூடிவினா யகனைப் போற்று
மாவாக வாறுகா யந்தி ரத்தின்
மடங்காமல்[6] மூன்று சாமத் தீயும்
பரவாமல்[7] பங்கு எரித்திடு தேங்காய் போய்ப்
பலமாகும்[8] குப்பிவாய் கழுத்தில் கட்டு
தாங்காமல்[9] எடுத்திஞ்சிச்[10] சாற்றில் ஊட்டச்
சன்னிசுர தோஷம்போம் தவறி டாதே. 40

---

1 வாலா சங்க கசி 2 தவறாமல் தொந்தித்து 3 மண் எளிதாக 4 பரவி 5 மடங்காமல் மற்று மூன்று தீய பிரிவாக 6 பார்த்து எரித்திடுக 7 கைமந்த 8 தருக்காமல் 9 சாற்றில் ஊட்ட 10 அரைத்திடு சமனாகத்தான்

தவறாமல் இந்த வயிரவத்தைச் சாற்றுகிறேன்
கெந்தகம் வெங்காரம் சூதம்
சிவமான மனோசிலையும் அஞ்சும்
சேர்த்தரைத்துச்[1] செம்மண் கற்றாழைச்[2] சாற்றில்
கவடேது மில்லாமல் குப்பிக் கேத்திக்
கண்டு முன்போல் சிறுசாமம் எரித்தெடுத்துத்
தூவிவரும் இஞ்சிஒன்று நாலில் கூட்டி
விவரமாய்ப் பழச்சற்றி லரைத்து[3] உருட்டியே 41

உருட்டுசிறு பயற்றலவாய் நிழலு லர்த்தி
உறவாக மண்டலம்நெற் புடந்தான் போட்டுச்
சிரட்டை தன்னில் உருண்டைஅனு பானத்தில்
செய்திடத் தொண்ணூறு சன்னி வாத குன்மம்
கரசூலை சத்திகுன்மம் காச ஈளை
கடினசுர தோஷமெல்லாம் கடிகை அஞ்சில்
துரத்திவிடும் ஆனந்த வயிர வன்தான்
சொல்லரிய களங்கவினை பாவம் போமே. 42

**செய்முறை:** ரசசெந்தூரம் செய்வதைக் கேட்பாயாக. வாலைரசம் பத்துக்கழஞ்சு, கந்தகம் ஏழு கழஞ்சு சேர்த்துப் பொடியாக்கவும். அந்தப் பொடியைக் குப்பியில் சீலைமண் செய்து உலர்த்திக்கொண்டு, குப்பியின் வாயை மரத்துண்டால் மூடிப் பாண்டத்தில் நான்கு விரல்கள் அளவு வெண் மணல் பரப்பவும். வாலுகாயந்திரத்தில் குப்பியை வைத்து மூன்று சாமம் தீயை எரிக்கவும். குப்பியின் வாயைத் தேங்காய்கொண்டு கட்டவும். பின்னர் எரித்து எடுத்துக் கொள்ளச் செந்தூரம் ஆகும்.

---

1 சாற்றில் அகப்பட்ட வாய் 2 ஊட்டே

**தீரும் பிணிகள்:** சன்னி, சுரதோஷம்

**அனுபானம்:** இஞ்சிச் சாறு.

வயிரவ மாத்திரையைப் பற்றிக் கூறுகின்றேன். கந்தகம், வெங்காரம், ரசம், லிங்கம் என்ற ஐந்து சரக்குகளையும் கற்றாழைச் சாற்றிலரைத்துக் குப்பியிலிட்டு, வாலுகாயந்திரத்தில், ஆறு சாமம் எரித்து எடுக்கவேண்டும், இஞ்சி 4ல் 1 பங்கும், கூட்டி எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்துப் பயற்றம் பருப்பு அளவுக்கு உருண்டை செய்யவேண்டும். இதை, நிழலில் உலர்த்தி எடுக்கவேண்டும். இதுவே வயிரவ மாத்திரையாகும்.

**தீரும் நோய்கள்:**

| | |
|---|---|
| சன்னிகள 96 | வாதகுன்மம் |
| கரசூலை | சத்திகுன்மம் |
| காசம் | ஈளை |
| சுரதோஷம் | |

**அனுபானம்:** தக்கபடி

**கால அளவு:** ஐந்து கடிகையில் மருந்து வேலை செய்யும்.

## வங்காரச் சஞ்சீவி

போமென்ற வங்காரச்[1] சஞ்சீவி தன்னைப்
புகலக்கேள் நற்காந்தம் பலந்தான் பத்து[2]
ஆமென்ற அப்பு நாகமதுக்கு இரட்டி
அழகான பொன்மொழியும் வங்கமும் அப்படியே

---

1 வங்காரச் சஞ்சீவி அக்னி குமாரன் வைக்க விபரங்கேள்
2 நற்காந்தம் பத்து

நாமென்ற[1] அரசு[2] அத்திப் பட்டைச் சாற்றில்
நன்றாக[3] அரைத்துருட்டிக் கலசத் திட்டுத்
தாமென்ற[4] மண்சீலை யேநாம் சேர்த்துத்
தளியாமல் கசபுடம்பார்த் தடவாய்ப் போடே. 43

போட்டெடுத்துச் செந்தூரம் தன்னோ டொக்கப்
பொரிகாரம் வராகன்எடை மூன்றுங் கூட்டித்
தேட்டமுடன் சிறுகீரை பொன்னாங் காணி
செந்நா யுருவியுடன் கீழ்க்காய் நெல்லி
நாட்டமுடன் ஒவ்வொருவேர் தேசிக் காய்போல்
நலமான பழச்சாற்றா லரைத்துச் சேர்த்து
வாட்டமற[5] இவைஎல்லாம் ஒன்று[6]போலக்
குன்றிமணி போல் உருட்டிநிழல் உலர்த்திக்
கொள்ளே. 44

கொள்ளப்பா வெள்ளுள்ளித் தயிலந் தன்னில்
கொண்டிடில்தொண் ணூற்றாறு சன்னி வாதம்[7]
மொள்ள[8] முள் வலிப்பு[9] பிறவலிப்பு
முயல்கண்ட உளமாந்தை சீமேகம் நீர்மேகம்
விள்ளப்பா வளி குன்மம் காமாலை
மேகமென்ற தெல்லாம்போம் திவசம் பத்தில்[10]
தெள்ளுதமிழ்க் குறுமுனிவர் தோய்த்துரைத்த மார்க்கம்
செய்திடில் தப்பாது நிசம் சொன்னோமே. 45

**செய்முறை:** காந்தம் பலம் பத்து, நாகம், தங்கப் பொடிவங்கம் ஒவ்வொன்றும் 20 பலம் எடுத்துக்கொள்ள

---

*1 பொங்காத அப்ரக நாக ஆட்டிப்போட்டு 2 மங்காத 3 அத்தி 4 மாறாமல் 5 தாங்காமல் சீல் இட்டு சீலை செய்து 6 வாட்டமற 7 ஒன்றாய் 8 என்பான் 9 உள்ளப்பா 10 சம்பத்தில்*

வேண்டும். அரசு, அத்திப்பட்டைச் சாற்றில் அரைத்து உருட்டிக் கவசம் இட்டுத் தனித்தனியாகக் கஜபுடம் வைக்க வேண்டும்.

செந்தூரத்தின் எடைக்குப் பொரிகாரம் வராகன் எடை சேர்த்துத் தங்கப்பொடி, காந்தம், வெங்கம் என்ற மூன்றும் கூட்டிச் சிறுகீரை, பொன்னாங்காணி, செந்நாயுருவி, கீழ்க்காய் நெல்லி வேர்களைத் தேசிக்காய் அளவு எடுத்து எலுமிச்சங்காய்ச் சாற்றிலரைத்துச் சேர்த்துக்கொள்ள வேண்டும். குன்றிமணி அளவு உருட்டிக்கொண்டு, நிழலில் உலர்த்தவேண்டும்.

**அனுபானம்:** வெள்ளுள்ளித் தைலம்

**தீரும் நோய்கள்:**

| | |
|---|---|
| 96 வகை சன்னிகள் | பிறவலிப்பு |
| முயல்கண்டன் வலி | உளமாந்தை |
| சீமேகம் | நீர்மேகம் |
| வலிகுன்மம் | காமாலை |
| மேக நோய்கள் | |

## அக்னிக் குமாரன்

செப்புகிறேன் உத்தண்ட[1] அக்னிக் குமாரன்
செய்திடுநீ லோகபற்பம் தாரம் பூரபற்பம்
அப்ரகபற்ப[2] மதிகாந்தபற்பம் சூதம் ஐந்துமே
நோரானவாகக் கதிக்காந்தபற்பம் சூதமைந்துமே[3]
அளவாக நாற்சாந்த

---

1 உத்தண்ட குமாரன் 2 சூத பற்பம் 3 ஐந்து மோர்

ஒப்புரையச் செருப்படிச்சாறு விட்டு வாட்டி
உலர்த்தி எடுத் தடைத்திடுநீ.........
குப்பிக்குப் பாதிப்பு வெடிப்பில்லாமல்
சிலைசெய்து மேலான வாலுகையில் ஏத்துவாயே 46

ஏற்றிஎடு த்திடுசாமம்[1] இருமூன் றாக
எண்ணிய உத்தியும் மூன் று பங்கு[2]
ஆற்றிஎடுத் தைங்கரனைப் பூசை பண்ணி
அஞ்சாமல் மஞ்சாடி[3] அனுபா னத்தில்
பார்த்திட ந்த சன்னிசுர தோஷம் காசம்[4]
பாண்டுகுன்ம சூலையும்போம் இச்சா பத்தியம்
பார்த்திடின[5] நீர்தயிர்மோர் பழம்பால் வெல்லம்
பாங்கான கரும்பு பானகமும் ஆமப்பா. 47

செய்முறை: லோகப்பற்பம். அரிதாரப்பற்பம், பூரப் பற்பம், அப்ரகப்பற்பம், காந்தப்பற்பம் ஓர் எடை, கந்தகப் பற்பம், ரசப்பற்பம் ஓர் எடை எடுத்துக்கொண்டு, செருப்புச் சாறு விட்டு. உலர்த்திக் குப்பியிலிட்டு, வாலுகாயந்திரத்தில் வைத்து, ஆறு சாமம் எரித்து எடுக்கவும். பின், ஆற விட்டுக் கணபதியைத் துதித்து, மருந்தை எடுத்துக்கொள்ள வும்.

அளவு; மஞ்சாடி

**தீரும் நோய்கள்:**

| | |
|---|---|
| சன்னி | சுரதோஷம் |
| காசம் | பாண்டு |
| குன்மசூலை | என்பன |

---

1 நாற்சாமம் 1 சாம்பல் மூன்றாக 3 பங்கு பங்கு
4 அஞ்சுரம் 5 சாரம் 6 அதின நீர்

**பத்தியம்:** இச்சா பத்தியம்

உணவு: இளநீர், தயிர், மோர், பழம், பால், வெல்லம் பாக்கு, கரும்பு, பானகம் நன்று

## அப்ரகச் செந்தூரம்

அப்புரச்செந் தூரமதன் மகிமை தன்னை
அயனறிவான் மற்றுள்ளோர் அறிய மாட்டார்
துப்புரவாய்க் காயசித்திக் காதி[1] சித்தி[2]
துணை இப்புவியில் நாலுசொல்லு மிடவேகு[3]
கருப்பு[4] வியாதிக் காருந் தப்பாமல் உலையில்
காய்ச்சித் தனியாவின் பாலில் சிவக்கத்தோய்த் திடாயே
தப்பாமல் உலையிட்டுச் சிவக்கக் காய்ச்சித்
தனியாவின் பால்தனில் தோய்த்தி டாயே. 48

தோய்த்திடுநீ ஈண்டுதரம் சிறுகீரை இரண்டு[5]
துலங்கு பொன்னாங் காணிரண்டு தோய்த்துத்
தோய்த்து
மாய்த்திடுநீ[6] அச்சாற்றில்[7] மூன்றுநாள் ஊறி
வாகாக எடுத்துணர்த்தி[8] ரவி[9] உலர்த்திச்
சாய்ந்திடுநீ புதுப்பைக் தள் மருந்து[10] வைத்துச்
சரிபாதி நெல்லுமிட்டுத் தேய்த்துக் கொண்டு
தேய்த்திடுநீ குழிதாழி பழஞ்சா டிக்குள்
ஏற்றுநன்றாய்ச் சூடுதணிய வைத்து இறுத்துப்பாரே 49

---

1 காயசித்தி சொல்லுகிறோம் 2 பொன், சிவப்பு, கறுப்பு வெள்ளை 3 நாலுசாதி வகை நாலுக்குள் 4 மீதறிந்து வெகுகறுப்பு வியாதிக்காகும் 5 பங்கு 6 மாய்த்த இம் மூன்று 7 தினம் நாள் மூன்று 8 எடுத்துணர்த்தி 9 காயந்தி 10 மருந்தை

இறுத்துப்பார் வெண்ணைஒவ்வா தெருக்கம் பாலிட்டு
ஏழுநாள் முறையா ஊறித் தீர்த்து
மறுத்தெடுக்கக் கல்வத்தை ஏற்றி ஆட்டு[1]
மடக்கிவிட்டுக் காட்டெரு[2] விடத்தைப் போடு
செறுத்தெடுத்துப் புடம்போடச் செம்முள் ளங்கி
செங்குமரி நாயுருவி கொழுஞ்சி இஞ்சி[3]
துத்தமால் கிழங்கு[4] கருணைக் கிழங்கு
கடுங் கதலிக்கிழங்கு பொன்னாங் காணியே 50

காணியுடன் சாரணத்தி மணித்தக் காளி
கறிப்பிரண்டை நீர்முள்ளி கொட்டை கரந்தை
பூணு அம்மான்[5] பச்சிலைகள் ஆராயு
ஒவ்வொரு[6] சாறுபுட மூன்றிட் டெரிக்க வாங்கி
ஆணவத்தை அடக்கியம்மை தனைப்பூ சித்து
அப்பனே ஆலவிழுதுக் கிஷாயந் தன்னில்
தோண அரைத்தெடுத்த விதமாய்ப் புடத்தைப்
போடச் சொல்லரிது செந்தூரம் சுருக்குத்தானே. 51

தான்என்ற செந்தூர மனுபா னத்தில்
தவறாமல் பணஎடைமண் டலந்தான் உண்ண
நான்என்ற புத்தி அறிவார்க்குண் டாம்
நன்றாகத் தந்தம்எல்லாம் இறுகி ஏறும்
ஊன்என்ற தசைநரம்பு பூறுகி ஏறும்
ஒளிவாகக் கணகளெல்லாம் ஒளிஉண் டாகும்
தீஎன்ற[7] எல்லாம்தான் பத்தியமே இல்லை
செல்வமிக உண்டாகும் தின்ற பேர்க்கே 52

---

1 ஆட்டி 2 உளபுடத்தை 3 இரு சிறுத்த
4 உருளை 5 காணே 6 ஊறும்
7 தீர்க்கம்

தின்றவர்க்குக் காலனும் சற்ற கன்றே[1] நிற்பான்
தேன்மொழியாள் போகமது தினமும் வேண்டும்
பொன்றலரும் குன்மமொடு[2] குட்டம் சூலை
பொல்லாத மேகமொடு கர்ப்ப நோயை
வென்றிடு பொய்யல்லஇது உண்ணும்[3] போது
வேணுமது[4] கோமயநெய் ஏற்ற சாணாகங்
குன்றவதைத்[5] தெடுத்த[6] அளவாய்ப் புடநான் கிட்டால்
கோபமில்லை உமையவள்தன் விந்து தானே. 53

**செய்முறை:** அப்ரகத்தை எடுத்துக்கொண்டு, உலையில் சிவக்கக்காய்ச்சி ஆவின் பாலில் தோய்க்கச் சுத்தியாகும்.

சிறுகீரைச்சாற்றில் இரண்டு தரமும் பொன்னாங்காணிச் சாற்றில் இரண்டு தரமும் தோய்க்கவேண்டும். மேலும் மூன்று நாள் மேற்சொன்ன சாற்றில் ஊறவைக்க வேண்டும். 4-ஆம் நாள் ரவி புடத்தில் வைத்து எடுத்துக்கொள்ளவும். மேற்படி மருந்தைப் புதுப்பையில் வைத்துப் பாதியளவு நெற்புடத்தில் இட்டுத் தேய்க்க வேண்டும். சூடு தணியப் பழஞ்சாடியில் வைத்து இறுத்துக்கொள்ள வேண்டும்.

மேற்படி சரக்கை, எண்ணெய் எருக்கம்பாலில் ஏழு நாட்கள் ஊற வைத்துக் கல்வத்திலிட்டு மடிய ஆட்டிப் புடமிடவும். காட்டெருச் சாணம் கொண்டு எரிக்க வேண்டும்.

---

1 சாந்தனாய் இருப்பான் 2 போன்றப்பா வரும் காச
3 நித்தம் உண்ணும்போது 4 வேகம் எனில் கோழியாம்
5 காறையதில் 6 தொடுத்து

பின்னர்க், கற்றாழைச்சாறு, நாயுருவிச்சாறு, கொழுஞ்சி இஞ்சி. துத்தமால் கிழங்கு, கருணைக் கிழங்கு, கதலி பொன்னாங்காணி, சாரணச்சாறு, கொட்டைகரந்தைச்சாறு அம்மான் பச்சரிசிச் சாற்றில் அரைத்து மூன்று புடம் வைத்து, எடுத்துக்கொள்ளச் செந்தூரம் ஆகும்.

**அளவு:** பண எடை.

**கால அளவு:** மண்டலம்

**தீரும் பிணிகள் :** பல் இறுகிப் போகும். தசை நரம்புகள் இறுகிக் கண்களில் ஒளி உண்டாகும். செல்வம் இம்மருந்தை உண்டவர்களுக்கு உண்டாகும். காலன் விலகிப்போவான். குன்மம், குட்டம், சூலை, பொல்லாத மேக நோய்கள், கர்ப்பாயாச நோய்கள் போகும்.

**உணவு:** தேவையான அளவுக்குப் பசுநெய் சேர்த்துக் கொள்ள வேண்டும். பத்தியம் இல்லை.

## காளமேக நாராயணச் செந்தூரம்

விந்தைதிகழ் குறுமுனிவர் சொன்ன காள
மேகநா ராயணச் செந்தூரம் செய்யக்
கந்தகமும் அறுபதெடை அதில்நேர் சூதம்
கெட்டியான சாதிலிங்கம் வராகன் மூவைந்
தந்தமுள்ள[1] மால்தேவி வராகன் எட்டுக்
கனமான[2] மனோசிலையும் இரண்டரையே ஆகும்[3]
பைங்கொடியே சுத்திபண்ணி நிறுத்துக் கொண்டு
பண்பான கல்வத்தில் ஏற்று வாயே 54

---

1 தந்துமால் 2 தான் 3 இரண்டை

ஏற்றிநன்றாய் எருக்கிலையால்[1] புரசிலைச் சாறு
இனியதும்பைச் செருப்புச் சாறுசெம் முள்ளிச் சாறு
பூத்த மாதுளையின்சாறு நந்திப்பூச்[2] சாறுகள்
முருக்கம் பூச்சாறும் வகைஒவ் வொன்றின்
ஏத்தியதாய்ச் சாமம்ஒன் றரைத்து வாங்கி
நின்வாக்குப்[3] பறக்கிமண் ணேழு[4] செய்து
பாய்த்தரவி தனில்உலர்த்தி மருந்தை யூட்டிப்
பக்கறைகொண் டடைத்துவாய் மண் செய்வாயே. 55

செய்தபின்பு கன்னவாய்ச்[5] சட்டி தன்னில்
சிறக்க[6] நாலு விரலுக்கு மணலைக் கொட்டிப்
பையவே குப்பிதனை நாட்டி வைத்துப்
பதறாமல் குடமாட்டு மணல்வாய் மூடி[7]
ஐயமறப் பொய்யாமல்[8] அடுப்பேற்றி நாலுசாமம்
அராமல் முன்போல எரித்துத் தீர்ந்து
செய்யவயி ரவன்தனையே பூசை பண்ணி
வேண்டியே குப்பிஎடுத் தடைத்துக் கொள்ளே. 56

உடைத்தெடுத்துச் செந்தூரம் பார்க்கும் போது
ஒப்பல்ல முருக்கம்பூ[9] நிறமே ஒப்பாம்
வடித்ததிரி[10] கடுசுத்தூள் கண்டங் காரியிலை
ஆடாதோடை இலைத்தூது பத்திரி இடப்படவே
பிட்டு[11] வைத்துப் பிளந்துதேனும் செந்தூரப் பணம்
பாதிதிவசம் பத்துடைந்து இரண்டு நேரம்[12]
உண்ணத் தீரும் வியாதி சொல்லரிய
காசம் என்றதெல்லாம் போமே 57

---

1 எழிலான 2 அருதப்பூ 3 நினைவாக 4 மண் செய்வாயே 5 லாழிவாய் 6 சிதறாமல் 7 மணலால் மூடி 8 ஐயமாத 9 நிறம் எல்லாம் 10 வடித்த 11 ......வத்துப்பு 12 இருநோவு

போகுமெலி கடிஇருமல் சுவாச காசம்
பொல்தாத மந்தாரச் சிலேத்துமம் மூர்ச்சை
மேகமென[1] நின்றுகொல்லு இளைப்புச் சன்னி
மூர்ச்சையுடன்[2] சயகாசம் மூறிந்து போகும்
வாக்குள்ளபடி[3] தேன்நாற்பது நாள் உண்ண
வண்டுகடி புண்சூலை பதினெட்டுக் குட்டம்
தேகமெங்கும் புள்ளிகுறை நோவு வீக்கம்
செவ்வண்டு கடிசிரங்கு சிதறிப் போமே 58

சிதறிவிடும் அரையாப்பு நெஞ்சில் நோவு
தீராத கண்ணோசி கபால[4] சூலை
உதிரமண்டை[5] வீக்கம் அஞ்சுநோவு மூகோ
பீனிசநீர் ஓதுபோது[6] முதிர் விளை
வெள்ளுள்ளித் தைலம் தன்னில்
உசியாமல் பத்துநாள் பணத்துக் குண்ணப்
பதறுசன்னி தொண்ணூறு வாதம் என்பான்
பக்கவலி அனுதனுர்வாத[7] ஏகும் பாரே. 59

பாரிந்தச் செந்தூரம் மிளகு[8] சுக்கு
பாங்கான வெங்காரம் அசமதாகம்
நேரிந்தப் படிமுருக்கம் பட்டைச் சாற்றில்
நினைவாக லோகச் செந்தூரம் கூட்டிச்

---

1 மேகம் 2 மேல்மூர்ச்சை 3 திப்பிலி தேனில் 4 பால்சூலை 5 மடல் 6 பீசையொடு 7 வாதம் ஏகும்பாரே 8 செந்தூரத்தைக் கூட்டி தேறவது. நாற்பதுநாள் அரைத்துத் தொடர்ந்து தின்னத் தீரும் வியாதிகளுட திறம் கேளப்பா, வோரரிது, திரிசன்னி. குத்துவாதம் மேயாத முகவாதம் ஒடுக்குந்தானே

சேரிந்த நாற்பதுநாள் சேர்ந்து தின்னச்
சன்னியது யாவாதம் துணுக்கு வாதம்
ஓரிந்தப் பக்கவாதம் அந்திர வாதம்
மேயாத முகவாதம் காணே. 60

காணு[1] தனு வாதமுடன் கொண்டல் வாதம்
கல்லடைப்புச் சதையடைப்பு நீரடைப்புப்
பூணுவல்[2] குணம் எரிகுன்மம் சத்தியுடன்
தீனவலி[3] அட்ட குன்மம் மூலவாயு
கோணவே வலிப்புடனே கிறுகிறுப்பு
கொடியசன்னி வாதமுதல் தோஷம் தீரும்
நீள்நிலத்தின் வாழ்க்கைதனில் பன்னாள் கொள்ள
நிபமான கெர்ப்பவினை[4] நீங்கிப் போமே. 61

நீங்குமே விப்புருதி அடியில்[5] விருப்புருதி
நில்லாத கல்[6]விப்புருதி கெண்டை கோவை
தாங்கொணா உளமாந்தை யோனி சூலை
சார்த்தியதோர் கனல்லாத அண்டவாயு
வாங்காத விஷபாகம் பாண்டு ரோகம்
மாறாத பெருவயிறு நாபிச் சூலை
போங்கருடன் தனைக்கண்ட சர்ப்பம் போலப்
போகுமிது தப்பாது புகழ்ந்து[7] செய்யே. 62

**செய்முறை:** குறுமுனிவர் சொன்ன செந்தூரத்தின் செய்முறையைத் தெரிந்துகொள்ளவும். கந்தகம் எடை 60 பங்கு, ரசம் 10 பங்கு, சாதிலிங்கம் 5 வராகன், மனோசிலை 2½ வராகன் இவற்றைச் சுத்திசெய்து, நிறுத்துக்

---

1 காணுதலை 2 ஊண் 3 அட்டவலி 4 நயமான
5 போன்ற நோயும் 6 காய்ப்புருதி 7 கலந்து

கொண்டு கல்வத்திலிட்டு, எருக்கிலைச்சாறு, தும்பை, புரசம் பட்டைச்சாறு, செம்புள்ளிச்சாறு, மாதளம்பூச்சாறு. நந்திச் சாறு இவற்றில் தனித்தனியே $1\frac{1}{2}$ சாமம் அரைத்து, ஏழு சீலை மண்செய்து, ரவிபுடத்தில் வைத்து உலர்த்த வேண்டும். உலர்ந்தபின்பு, குப்பியில் வைக்க வேண்டும். ஒரு சட்டியில் நான்கு விரல்கள் அளவு மணல் பரப்பி, அதன் நடுவில் குப்பியினை வைத்துப் பாதி அளவு மணல்கொண்டு மூடவேண்டும். குப்பியை ஒரு மண் குடத்தால் மூடி, ஏழு சீலை மண் செய்யவேண்டும்.

நான்கு சாமம் அடுப்பிலேற்றி, எரித்து எடுக்கவேண்டும். தீயானது சிராகவும், மெதுவாகவும் இருக்கவேண்டும். வயிரவக் கடவுளைப் பூசை செய்து குப்பியில் உள்ள மருந்தை எடுத்துக் கொள்ளவும். இது முருக்கம் பூவைப் போல் சிவப்பாகக் காணப்படும்.

**தீரும் நோய்கள்:**

| | |
|---|---|
| காசம் | எலிக்கடி |
| இருமல் | சுவாசகாசம் |
| மந்தாரகாசம் | சிலேத்துமம் |
| மூர்ச்சை | இளைப்பு |
| மயக்கம் | சயகாசம் |

என்பன

**அனுபானம்:**

| | |
|---|---|
| திரிகடுகுத்தூள் | கண்டங்கத்திரித்தூள் |
| ஆடாதோடைத்தூள் | தேன் |
| வெள்ளுள்ளித்தைலம் | |

**உண்ணும் முறை::** தேனில் இரண்டு நேரம் (காலை மாலை)

**கால அளவு:** பத்து நாள், நாற்பது நாள்

**அளவு:** அரைப் பண எடை

**தீரும் நோய்கள்:**

| | |
|---|---|
| அரையாப்பு | நெஞ்சுநோவு |
| கண்ணோய் | உதரரோகம் |
| மண்டை விக்கம் | நோவு |

வெள்ளுள்ளித் தைலத்தில் சேர்த்துப் பத்து நாட்கள் உண்ணவேண்டும்.

பதறு சன்னி 96 வாத நோய்கள் பக்கவலி

செந்தூரத்துடன் சுக்கு, மிளகு, வெங்காரம் சமஎடை எடுத்து முருக்கம் பட்டைச் சாற்றிலரைத்து, லோக மண்டூர செந்தூரத்துடன் சேர்த்து 40 நாட்கள் உண்ணச் சன்னி வாதம், துணுக்கு வாதம், முகவாதம் போகும்.

தனுர்வாதம், கொண்டல்வாதம், கல்லடைப்பு, சதையடைப்பு. நீரடைப்பு, வலிகுன்மம், எரிகுன்மம், வாந்தி அட்ட குன்மம், மூலவாயு, கிறுகிறுப்பு, வலிப்பு, சன்னி வாதம் தீரும். கெர்ப்ப வினைகள் பல நாட்கள் உண்ணப் போகும்.

விப்புருதி, கெண்டை, நீர்க்கோர்வை, உளமாந்தை யோனி, சூலை, அனல்வாதம். அண்டவாயு, விஷபாகம் பாண்டுரோகம், பெருவயிறு, நாபிச்சூலை என்பன கருடனைக்கண்ட பாம்புபோல் விலகும்.

## நவலோகச் செந்தூரம்

செய்யவே பூபதிக்கு லோக பற்பம்[1]
 செயமான தாமிரப் பற்பம்[2] சூதப்பற்பம்
வெய்யகாரீயப் பற்பம் அப்ரகப் பற்பம்
 வெள்ளியப் பற்பம், சொர்ணப் பற்பம் காந்தப் பற்பம்
துய்யவங்கப் பற்பஇவை ஒன்ப தாக்குச்[3]
 சுருதிச் சமனாகவே குமரிச்சாறு விட்டு
நையவே நாற்சாமம் அரைத்து ருட்டி
 நன்றாக நிழல்உலர்த்திக் குப்பிக் கேற்றே. 63

குப்பிக்கு முக்கால் காணியிட்டே மண்செய்கு
 குண்டுச்சட்டி[4] மணல் மேலிட்டுக்கப் போட்டு
ஒப்ப அறையவே[5] மணலைமூடிச் சட்டிக்
 கோர்ச் சட்டி மேல்மூடிச் சிலைசெய்து
செப்பாக[6] வாலுகா அடுப்பேற்றத்
 தேவிதனைப் பணிந்துபன்னி ரண்டு சாமம்
வெப்பாக[7] எரித்திறக்குச்[8] சிவனைப் போற்றி
 வேண்டியன்னதானம்மிக விரும்பு வாயே. 64

விரும்பியிந்த அவிழ்தத்தை[9] எடுத்துக் கொண்டு
 மெச்சவே திரிகடுகு பொடியும் தேனில்
அருந்தத்தொண் ணூற்றாறு சன்னி வாதம்
 அடங்காத காசகுன்மம் சுர தோஷங்கள்
தீருமப்பா[10] வலிஇளைப்புக் குட்டம் சூலை
 தீருமிது தப்பாது தாக மானால்
கரும்பிள நீர் சர்க்கரைப்பால் தயிர்மோர் ஆகும்

---

1 செய் 2 வெள்ளி பற்பம் 3 ஒன்பதாக 4 குண்டு கடம் 5 ஒப்பியதை 6 செப்பியதை 7 & 8 எருக்குப் பொடியும் தேனிலுண்மையுடன் கூட்டி உள்ளுக்கு அருந்திடாயே 9 ......... 10 தீரும்

**செய்முறை:** லோக மண்டூரப் பற்பம், தாமிரப் பற்பம் ரசபற்பம், கருவங்கப் பற்பம், அப்ரகப் பற்பம், வெள்ளி தங்கப் பற்பம், காந்தப் பற்பம், வங்கப் பறபம் என்ற ஒன்பதையும் சம எடை எடுத்துக்கொள்ள வேண்டும். இவற்றைக் கற்றாழைச் சாற்றில் நான்கு சாமம் அரைத்துக் குப்பியில் இடவேண்டும்.

குண்டுசட்டியில் வெண்மணலைப் பரப்பிக்கொள்ள வேண்டும். இதில் குப்பியை, முக்காற்பங்கு மறைத்து மூட வேண்டும். குண்டு சட்டியை மேல் மூடிகொண்டு மூடிச் சீலை செய்து, உலர்த்தி, வாலுகாயந்திரத்தில் புடமிட்டு எரித்துக்கொள்ளவும். 12 சாமம் எரிக்க வேண்டும்.

பின்னர் தேவியின் பாதம் பணிந்து சிவபெருமானை வணங்கி அன்னதானம் செய்து, மருந்தை எடுத்துக்கொள்ள வும். இதுவே நவலோகச் செந்தூரம் ஆகும்.

**அநுபானம்:** திரிகடுகு, தேன்

**தீரும் பிணிகள்:** 96 வகையான சன்னிகள், வாதம் காசம், குன்மம், சுரதோஷம், வலி, இளைப்பு, குட்டம் சூலை என்பன.

**உணவு:** கரும்பு, இளநீர், சர்க்கரை, பால், தயிர் மோர் என்பன ஆகும். சந்தனம், சவ்வாது பூசிக்கொள்ள லாம்.

### சிந்தாமணி

வாதுசெய்யக்கேள்[1] சிந்தா மணியைச் சொல்வேன்
மட்டங்காச் சொர்ணப் பற்பம் சூதப் பற்பம்
கோதற்ற[2] தாமிரப் பற்பம் பார்க்கப் பற்பம்
கொடிதான ரசிதப் பற்பம் காந்தப் பற்பம்[3]

---

1 செய்ய 2 ஒத்ததாம் 3 அப்ரக பற்பம்

தீதற்ற லோகப்பற்பம் வகையாய்க்[1] கேளு
செருசமன்[2] பவழமுத்துப் சிவப்புப் பச்சை
போதற்ற[3] வயிரவயிடுரிய நீலம் புட்ப
ராகம் கோமேதகமும் கூட்டே. 66

கூட்டிஇந்த ஒன்பதுந்தான் பற்ப மாக்கக்
குறையாமல் முன்மருந்துக் கெட்டொன்[4] றாக்கி
நீட்டியரைத்து[5] மாதளம்பூ தாழம் பூவும்
நேராகத் துதுவளம்பூ பூச்சென்ன பகப்பூ
வாட்டமில்லா முருக்கம்பூ முல்லைச் சாற்றில்[6]
வகைக் கொன்றுக்கொரு[7] ஒரு
தேட்டரவாய் வில்லைபிடித்து வாத்திக்[8] சுண்ணேழ்[9]
செய்துகுப்பி தனக்குருக்கால் அடைத்திடாயே. 67

அடைத்து முன்போல்[10] எரியிட்டுப்[11] பன்னிரண்டு சாமம்
அனுங்காமல் ஆறவிட்டுப் பூசை பண்ணித்
திடத்துடனே பணவெடைகால் தேனில் உண்ணத்
தீராத காசமெட்டும் குன்மம் எட்டும்
வெடியுப்பு நீரிழிவு சன்னிசுரம் எல்லாம்போம்
விதிதனையோர் நாழிகை எழுந்து பேசும்
கிடைக்காத முக்திஉண்டாம் பாவ நோய்கள்
கிட்டவண்டா தொருநாளும் கிட்ட அண்டாதே 68

---

1 வகைத்தெழுகு 2 சேர்த்து சமன் 3 ஒத்த
4 எட்டொன்றுக்கு 5 அறை 6 சாற்றில் 7 ஒன்றுக்
கொவ்வொரு 8 பிடித்துணர்த்தி 9 மண்ணடி
10 அடைத்துமுன் 11 எரித்திரு

**செய்முறை:** சிந்தாமணியைச் செய்யும் முறையைக் கேட்பாயாக. தாமிரப் பற்பம், அப்ரகப் பற்பம், வெள்ளிப் பற்பம், காந்தப் பற்பம், லோக மண்டூரம் என்ற நான்கு பற்பங்களையும் சம எடை எடுத்துக்கொள்ள வேண்டும். பவழம், முத்து, வைரம், வைடூரியம், நீலம், புட்பராகம் கோமேதகம், மாணிக்கம் என்பவற்றுடன் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

ஒன்பது மணிகளையும் பற்பமாக்கி முன்சொன்ன பற்ப வகைகளுடன் 8க்கு 1 பங்கு என்ற விதியில் கல்வத்திலிட்டுக் கலந்து கொள்ளவும்.

பின்மாதளம்பூ, தாழம்பூ, தூதுவளைப்பூ, செண்பகப்பூ முல்லைப்பூ இவற்றின் சாற்றில் வகைக்கு ஒரு சாமம் ஆட்டி வில்லை பிடித்துக் குப்பியில் இட்டு, மணலால் மூடி, முக்காற் பங்கு அடைத்து, ஏழு சீலை மண் செய்து, மேல் மூடி பன்னிரு சாமம் எரித்து எடுக்கவும். பூசை செய்து மூடியைத் திறந்து காணச் செந்தூரமாக இருக்கும்.

**அளவு;** பண எடை

**தீரும் பிணிகள்:** தீராத காசம், சன்னி, கர்ம வினைகளான நோய்களை விடுவித்துப் பலனளிக்கும். நாழிகை நேரத்தில் பலன் தரும். அரியதொரு மருந்தாகும்.

**அனுபானம்:** தேன்

## சந்திரோதயம்

அண்டபகிரண்ட சந்திரோதயத்தை
அஞ்சாமல்[1] செய்வதற்கு வகையைக் கேளு

---

1 அடவு செய்யச் சூதச் செந்தூரம் பத்து

கொண்டாடுங் காந்தச் செந்தூ ரந்தான் பத்துக்
கூறரிய சூதச்[1] செந் தூரந்தான் பத்து
உண்டான வெள்ளிசெந் தூரம் பத்து
ஓங்கியஅப் ரகச்செந் தூரம் பத்தே. 69

பத்துடனே காரீயச் செந்தூ ரந்தான்
பகட்டான[2] வெள்ளியச் செந்தூ ரந்தான்
கொத்தான தாளகச் செந்தூரந்தான் பத்து
கூட்டி இந்தப்[3] பத்தொரு சமனதாக
வேத்தான நாற்சாமம் எருக்கம் பாலால்
விட்டரைத்துக் குப்பியிட்டு[4] அடுப்பி லேற்றிச்
சித்தாக வென்றுபன்னி ரண்டு சாமம்
தெளிவாகச் சிறுதீயாய் எரித்து வாங்கே. 70

வாங்கிஉமை யாள்பாதத்தைப் பூசை பண்ணி
மஞ்சாடி அனுபானம் தன்னில் உண்ண
விங்கு[5]பவுத் திரம் குறைநோய் வெள்ளைக்குட்டம்
மீளாத சக்திக்குன்மம் இரத்த காசம்
நீங்காத விஷபாகம் பாண்டு ரோகம்
நீரிழிவு சூலைசுரம்[6] சன்னி தோஷம்
தாங்காத வலிப்புழுய லகன்[7] கிராணி
சகலரோ கங்களும்போம் சத்தியந் தானே. 71

செய்முறை; சந்திரோதயம் செய்யும் முறையைச் கூறுகின்றேன். தண்டவாளச் செந்தூரம், காந்தச் செந் தூரம், ரசச் செந்தூரம், வெள்ளிச் செந்தூரம், அப்ரகச்

---

1 நாகச்செந்தூரம் பத்து 2 கட்டான 3 அந்த
4 குப்பியில் விட்டுக் குப்பிலேத்தி 5 திறங்குறை 6 சூலை கபம் 7 கண் கிரா‌ணி

செந்தூரம், லோகச் செந்தூரம், செம்பு செந்தூரம், கரு வங்க வெள்வங்கச் செந்தூரம், தாளகச் செந்தூரம் என்ற பத்து வகையையும் தனித்தனியே எடுத்துக்கொள்ள வேண்டும்.

எருக்கம் பாலில் நான்கு சாமம் அரைத்துக் குப்பியி லிட்டு, வாலுகாயந்திரத்தில் வைத்து மேல்மூடி கொண்டு மூடிப் பன்னிரு சாமம் எரித்தெடுக்க வேண்டும். இதுவே சந்திரோதயச் செந்தூரம் எனப்படும். உமையவள் பாதத்தை வணங்கி, இதனை எடுத்துக்கொள்ள வேண்டும்.

அளவு: மஞ்சாடி

**நீரும் பிணிகள்:** பவுத்திரம், குறை நோய், வெண் குட்டம், சக்தி குன்மம், ரத்தகாசம், விஷரோகம், பாண்டு ரோகம், நீரிழிவு, சூலை, சுரம், சன்னி தோஷம். வலிப்பு முயலகன் வலி, கிராணி எல்லா நோய்களும் நீங்கும். இது உண்மை

**அனுபானம்:** தக்கபடி

## வாதராட்சசன் செந்தூரம்

சத்தியமே வாதராட் சதனைப் பண்ணத்[1]
தாமபிரப்பற்பம் காந்தப் பற்பம் லோகப்பற்பம்
முத்திய[2] அப் ரகப்பற்பம் சூதம் கெந்தி
ஓர்பலமாகச் சமனாக[3] நிறுத்துக் கொண்டு

---

1 சொல்ல 2 உத்த 3 சூதம் கெந்தகப் பற்பம்
4 சமபாகம்

சித்திரமூ லச்சாற்றில்[1] ஓர்நாள் நல்ல
சீநதிச்சாறு காவேளை நாள்ஒவ் வொன்று
முத்திவர அரைத்தடைத்துக் குப்பித் தன்னை
மூதண்ட வாலுகை அடுப்பி லேத்தே. 72

அடுப்பேற்றுச் சாமமிரண் டெரித்து நன்றாய்[2]
ஆறவிட்டுப் பூசை[3] பண்ணி அனுபா னத்தில்
எடுத்தீயச்[4] சன்னிசயம் சுவாச காச(ம்)
இளைப்பிருமல் சத்திகுன்மம் சூலை தானும்
நடுக்குமூய லகன்[5] வலிப்புச் சுரங்கள் மாலை[6]
நாடாது தோடமும்போம் தாகம் கண்டால்
கொடுத்திளநீர் கொடுக்கவே[7] வெற்றி
உண்டாம் கூர்ந்து பாரே 73

**செய்முறை:** வாத ராட்சசனைச் செய்யும் விதியைக் கேட்பாயாக. தாமிரப் பற்பம், காந்தப் பற்பம், லோகப் பற்பம், ரசம், கெந்தி என்பனவற்றை ஓரளவாக எடுத்துக் கொள்ள வேண்டும். சித்திரமூலச்சாறு, சீந்தில்சாறு முட்காவேளைச்சாறு இவற்றில் தனித்தனியாக ஒவ்வொரு நாள் அரைத்து எடுக்கவும். பின்னர்க் குப்பியில் வைத்து வாலுகா எந்திரத்தில் வைத்து மூட வேண்டும். அடுப்பில் இரு சாமம் எரித்து ஆறவிட்டுப் பூசை செய்து எடுத்துக் கொள்ளவும். இதுவே வாத ராட்சசச் செந்தூரம்.

**அனுபானம்:** தக்கபடி

---

1 கஷாயத்தில் 2 பின்பு பார் 3 புகை பண்ணி
4 எடுத்திருந்த 5 கண் 6 காமாலை 7 பார்த்துக் கொடுக்க

உணவு: தாகம் எடுத்தால் இளநீர் குடிக்கவும்

**தீரும் பிணிகள்:** சத்தி, சன்னி, சயம், சுவாசகாசம் இளைப்பிருமல், சூலை, முயலகன் வலி, வலிப்பு, மாலைசுரம் தோஷம் போகும். வெற்றிகள் கிடைக்கும்.

## சுரமாக்கினிச் செந்தூரம்

கூர்ந்துசுர மாக்கினிக்கு[1] லோகப் பற்பம்
கூட்டவேபலம்[2] இரண்டதனில் பாதிக்[3] காந்த
மாந்த காந்தத்துக்குப்[4] பாதிக்கெந்தி
அதிற்பாதிச் சூத அதிற் சிலையும் பாதித்
தோந்தினை[5] நாற்சாமம் குமரிச்சாற்றால் சிறக்கவே
அரைத்தெடுத்து உலர்த்திக் குப்பிக்கு ஏற்றி
வார்ந்தவாலு கைஅடுப்பில் ஆறு[6] சாமம்
மாறும் எரித்ததனைத் தேனில் உண்ணே. 74

தேனில்உண்ணப் பீலிகைமந் தார காசம்
சேத்துமம்கா மாலைபித்தப் பாண்டு சோகை
கடன்வலி குன்மம் அசீரண நீர்க்கோவை
குளிர்வெதுப்புச் சூலைவலி சீதம் பேதி
மாநிலத்தி[7] லுள்ளபதின் மூன்று சன்னி
அக்கினிமந்[8] தம்எல்லாம் மாண்டு போகும்
தானிதனைச் செய்து வைத்துக்கொண்டு நீதான்
ஊரணியோர்க்கு[9] வினை கரந்து[10] போமே. 75

---

1 சுயமாக்கினிக்கு 2 கூட்டுலா மீண்டதனில் பாதிக் காந்தம் 3 ஆர்ந்த காந்தம் பாதிக்கெந்தகந்தான் 4 திலபாது ஓதமதி பச்சிலையும் பாதி 5 தொந்ததனை 6 சாமமாறா மல் எடுத்ததனை 7 பாலில் உண்ண 8 அக்னி மாந்தம் 9 தரணிக்கோர்க்கும் கூறல் 10 தகர்ந்து

**செய்முறை:** லோகப்பற்பம் 2½ பங்கு, இதில் பாதிக் காந்தம், இதில் பாதிக் கந்தகம், கந்தக எடையில் பாதி ரசம், ரச எடையில் பாதி மனோசிலை, இவற்றை எடுத்துக் கொள்ள வேண்டும். இவற்றைக் கற்றாழைச் சாற்றில் அரைத்தெடுத்து, 4 சாமம் வாலுகாயந்திரத்தில் ஆறு சாமம் எரித்தெடுக்கவும். இதுவே சுரமாக்கினிச் செந்தூரமாகும்.

**அனுபானம்:** தேன்

**தீரும் நோய்கள்:** பீலிகை, மந்தாரகாசம், காமாலை பித்தப்பாண்டு, சோகை, கூன்வலி, குன்மம், அசீரணம் நீர்க்கோவை, குளிர்சுரம், வெப்பச்சுரம், சூலைவலி, சீதபேதி 13 சன்னிகள், அக்கினிமந்தம் என்பன நீங்கிப்போகும்.

## மண்டூரச் செந்தூரம்

தகர்ந்துபோ மண்டூரச் செந்தூரந்தான்
சாற்றுகிறேன் நூறாண்டின் பழங்கிட்டத்தை[1]
உகந்துடையாப் பாண்டத்தில் போட்டு ஆட்டின்மூத்திரம்[2]
ஊறித்திகழ்ந்த பின்பு வற்றவே எரித்தலசி
வாங்கித் திறமாகக் கற்றாழைச் சாற்றிலாட்டிப்
பெறவே ஓட்டிலிட்டு மேலோடு மூடிச்
சுற்றுவிற்புத் தெரியாமல் சீலைமண் செய்தே. 76

சீலைசெய்து குமரிச்சாறு புடந்தான் பத்துச்
சீரான நீர்முள்ளிச்[3] சாறுபுடந்தான் பத்து
விளி எட்டொன்றான் தண்ணீர் புடந்தான்
புத்துப்பாலன் வேலிரசம்[4] புடந்தாறு புத்து

1 பாலில் உண்ண 2 அக்னி மந்தம் 3 தரணி யோர்க்கு 4 தகர்ந்து

மாதுளைதான்[1] வெந்த தண்ணீர்ப் புடந்தான் பத்துக்
காலாகப் புடம் அறுபந்தான் போடக்
காந்திஉயர் செந்தூரம் கண்டு கொள்ளே. 77

கொள்ளப்பா பணவிடைதான் கரிப்பான் சாற்றில்
கொள்ளமகோ தரம்கவிசை பிறநீர்க் கோவை
துள்ளுகெண்டை பாண்டும் பாகஞ்சூலை[2] சோகை
பெருவயிறு குன்மம் பேய் வீக்கம்
உள்ளநீர்க் கடுப்பு அனலை[3] வாதரோக
மதனை செய்கிராணி குடல் வாதங்கள்
தெள்ளிமையா அனுபானம் அறிந்து கொண்டால்
தீராத பலநோய்கள் தீரும் பாரே. 78

**செய்முறை:** பழங்கிட்டத்தை உடைத்துப் பாண்டத்திலிட்டுக் குறுணி அளவு ஆட்டின் நீரை ஊற்றவேண்டும். இதில் மூன்று நாட்கள் ஊறவைத்து எடுத்துச் சுண்டக் காய்ச்சவேண்டும். இதுவே சுத்தியாம்.

பின்பு கற்றாழைச்சாற்றில் ஆட்டி எடுத்து மேல் ஓடு கொண்டு மூடிச் சீலைமண் செய்து, பத்துத்தரம் புடமிட வேண்டும். நீர்முள்ளிச்சாறு, தண்ணீர், கொடுவேலிச்சாறு மாதளைச்சாறு, வீளிச்சாறு, வெந்நீர் இவற்றில் தனித்தனியாகப் பத்துத்தரம் புடமிடவேண்டும். ஆக மொத்தம் அறுபது தடவை புடமிட்டபின்பு செந்தூரம் ஆகும்.

**அனுபானம்:** கரிசாலைச்சாறு

---

1 விலை மாதுளை வெந்த தண்ணீர் பத்து விளையிட்டதொன்றான தண்ணீர்ப் புடந்தான் பத்து மேலான திரிபலைச்சார் புடந்தான் பத்துக் காலாப்புட அறுபதுந்தான், புடகாந்தி உயர் செந்தூரமாம் கண்டு கொள்ளே. 2 சூலை 3 உலை

அளவு: பண எடை

**தீரும் பிணிகள்:** மகோதரம், கெண்டை, பாண்டு சோகை, பெருவயிறு, குன்மம், பேய்வீக்கம், நீர்க்கடுப்பு அழலை, வாதரோகம், கிராணி, குடல் வாதங்கள், அனுபானம் அறிந்து கொடுக்கத் தீராத நோய்கள் நீங்கும்.

## திரிலோக மண்டூரம்

பாருதிரி லோகமண் டூரத்தைச் சொல்வேன்
பழங்கிட்ட காந்தஅரப் பொடியும் மூன்று
நேராக மூன்றுபலம் வகையொன் றுக்கு
நிறையாகச் சுத்திசெய்து எருக்கம் பாலில்
சீராக ஓர்சாமம் அரைத் துருட்டித்
திறமாக வில்லைபிடித் தகலி லிட்டுப்
பேராக மேல்மூடிச் சீலை செய்து
பெரியகுழி வெட்டிஅதில் புடத்தைப் போடே. 79

போட்டு எருக்கம்பால் கரை[1]கையான் சாறு[2]
சிறுகீரை பொன்னாங் காணிப் போடு
நீட்டியசெந் நாயுருவி உசிலம் பட்டை
நீர்முள்ளிக் கற்றாழை இவைஒவ் வொன்றில்[3]
சுட்டாகப் புடம்பத்தாம் இவைதப் பாமல்
இப்படியே நூறுபுட[4] மிளங்கப் போட்டுத்
தேடரிய வயிரவனைப் பூசை பண்ணித்
திரிகடுகுப் பொடியில் ஒரு[5] பணந்தான் உண்ணே. 80

---

1 கையாந்தகரை 2 விழிப்பீளை 3 யோவென்றி
4 சிறு 5 பணந்தூக்கி

உண்டிடவே[1] காமாலை பெருவயிறு சோகை
ஊது[2]மகோ தரம்கவிசைப் பாண்டு ரோகம்
மிண்டிகை கால்கடுப்பு வாத சூலை
மேகவெட்டை நீர்க்கடுப்பு சன்னி சீதம்
மண்டிய[3]மத் தாரம்சன்னி அண்ட வாதம்
சயரோகம் வலிப்பிளைப்புச் சகல நோயும்
பண்டிதரே பரிதிகண்ட பனிப்போல் நீங்கும்
பண்பாகச் செய்யெடுத்து ஒத்துப்[4] பாரே. 81

**செய்முறை:** பழங்கிட்டம், காந்தம், அரப்பொடி மூன்று பலம் சுத்தி செய்து, எருக்கம் பாலில் சீராக வில்லை செய்து, அகலில் இட்டு மூடிச் சீலைமண் செய்து, பின் பெரிய குழியை வெட்டி, அதில் இந்த அகலை வைத்துப் புடமிட வேண்டும்.

புடம்போட்டு எடுத்துப் பொடியை எருக்கம்பால் கையான்சாறு, சிறுகீரை, பொன்னாங்கண்ணிச்சாறு, செந் நாயுருவிச்சாறு உசிலம்பட்டைச்சாறு, நீர்முள்ளிச்சாறு கற்றாழைச்சாறு இவற்றில் அரைத்து வகைக்குப் பத்துப் புடமிடத் திரிலோகச் செந்தூரம் கிடைக்கும்.

**குறிப்பு:** எட்டு வகையான சாறுகள் மட்டுமே கூறப் பட்டுள்ளன. பாடபேதத்தில் வீழிச்சாறு, பீளைச்சாறு என்பன கூறப்பட்டுள்ளன. அவற்றையும் சேர்த்துக் கொண்டால் நூறுபுடம் என்ற கணக்கு சரியாகும்,

**அளவு:** ஒரு பணம்

---

1 உண்மையிலே 2 ஊறு 3 கண்டிய
4 பாரேபாரே

அனுபானம்: திரிகடுகுப் பொடி

தீரும் பிணிகள்: காமாலை, பெருவயிறு, சோகை மகோதரம், கவுசை, பாண்டு, கைகால் கடுப்பு, சன்னி சிதம் மந்தார காசம், சன்னி, அண்டவாதம், சயரோகம், சல தோஷம், களைப்பு, இளைப்பு என்பன சூரியனைக் கண்ட பனி என விலகும்.

## மகா திராவகம்

உற்ற[1] மகா திராவகத்தின் வியப்பைச்[2] சொல்லுவேன்
வருமுருங்கை[3] நாயுருவிக் குப்பை மேனி
துத்திஎருக் கிலைஊமத்தை சித்திர மூலம்
சொல்லரிய மன்னிலையும்[4] கதலி தாழை[5]
இத்தைஎல்லாம் வெவ்வேறு சுட்ட சாம்பல்
ஒக்கவே பலமொன்று[6] பாண்டத் திட்டுப்
பத்திரமாய் நாலுவள்ளம்[7] தண்ணீர் வார்த்துப்
பதறாமல் மூன்றுநாள்[8] கிண்டி மூடே. 82

மூடி மறுநாள் சும்மா வைக்க
முத்துப்போல் தெளிந்ததண்ணீர் தன்னை வாங்கிப்
பீடுபெற உனக்காக வற்றக் காய்ச்சிப்
பேராவின் மோர்அதே குளித்துப்பனியில் வைக்க
விடாக உறைந்தடியில் உப்பாய் நிற்கும்
இப்படியே பதினொன்றும் வெவ்வே றாக
நாடிஎடுத் திடு[9] வகைக்கு வராகன் மூன்று
நாள்காய்ச்ச வெடியுப்பு ஒருநூ றாமே. 83

---

1 அகலநத்த 2 வகையை 3 வரு 4 மன்னிலையும் 5 பெறுக 6 வள்ளம் ஒன்று 7 நாலுவள்ளம் 8 கெட்டி 9 நாடி எடுத்தில் வீரன் மூன்று நாலாங்காய்

ஆகியதுத் தந்துரிசு[1] இந்துப்பு பூநீறு
அளவாகக்[2] கல்லுப்பு வளையுப்புச் சாரம்
பாகஞ்சேர் அன்னத்தைக் கரைத்த பேதி
பதினைந்து படிகாரம் ஏழு வானமிக்க
வேகமுள்ள சவுட்டுப்பு ரெண்டு பத்து
மீறாமல் இவைஎல்லாம் பொடியே செய்து
வாகான பங்கு வைத்தோர் பங்கு
வளமான கலசத்தில் போடு போடே. 84

நிலையத்துக் கரைவாசிப் போட்டு மேலே
ஏந்தியதோர்[3] குகைத்தூரில் பணம்[4] போல் போற்று
நிலையான குப்பிவிலாகக் குனிந்து போற்று
நேராக விருசுமரு நெருக்கச் சேர்த்து
மலையாமல் குப்பிகைவச[5] வாயு அப்பனே[6]
சீலைமண் செய்துலர்த்திப் பின்பு
வலையாமல்[7] அடுப்பிலேற்றி எரிக்கக் குப்பி
வாயில்வருந் திராவகந்தான் பீங்கான் வாங்கே. 85

வாங்கி ஒருதுளிதான் அனுபானத்தில் உண்ண
வலியகணம் குன்மம் எட்டும் பாண்டும் போகும்
தாங்கொணா வருவைகெண்டைக் கவிசை பாண்டு
சாற்றரிய பெருவயிறு விறநீர்க் கோவை
ஏங்கும் மகோதரம் குளிர்தசை வாயுதானும்
ஒருதானுமொரு இது தப்பாதென்று உலகத்தோர்க்கு
ஓங்குபுகழ் பொதிகைஎனும் குவட்டின் மேலும்
செந்தமிழ்மா முனிஉரைத்தார் தெளிவாய் நன்கு. 86

---

1 ஊத்தமறிப் பூநீறு அதில் வாங்கு 2 முப்பு வளையலுப்புச் சாரம் பாகம் கூடமுடன் 3 வாகா ரெண்டு 4 மேலே விளங்கியதோர் 5 போற்று 6 விருதமாகும் 7 அசையாமல்

**செய்முறை:** முருங்கை, நாயுருவி, குப்பைமேனி துத்தி, எருக்கிலை, ஊமத்தை, சித்திரமூலம், கதலி, தாழை இவற்றை எல்லாம் சுட்டசாம்பல் 1 பலம் வீதம் மண் பாண்டத்தில் இடவேண்டும். 4 பங்கு நீர் ஊற்றி இறுத்துக்கொள்ள வேண்டும். பின்னர் வற்றக்காய்ச்சி எடுத்துக்கொண்டு ஆவின் மோர் கலந்து பனிபுடத்தில் வைக்கவேண்டும். உறைந்துபோய் இருக்கும்.

முன்சொன்ன 11 சரக்குகள் வராகன் எடை எடுத்துக் கொண்டு, மூன்றாம் நாள் வெடியுப்பு 100 பலம், துத்தம் துருசு, இந்துப்பு, பூநீறு, கல்லுப்பு, வளையலுப்பு, நவச் சாரம், அன்னபேதி என்பன 150 பலம், படிக்காரம் 7 பலம் சவுட்டுப்பு 20 பலம் பொடி செய்து, கலத்தில் போட்டுச் சீலைமண் செய்து வாலையிலிட்டு எரித்துவிடக் குப்பியின் வாயில் திராவகம் வடியும். இதனைப் பீங்கான் கிண்ணத் தில் சேகரித்துக் கொள்ளவும். இதுவே மகாதிராவகம் ஆகும்.

**தீரும் நோய்கள்:** கனம், குன்மம் எட்டு, பாண்டு ரோகம், கெண்டைக்கவிசை, பெருவயிறு, பிறநீர்க்கோவை மகோதரம், தசைவாயு.

**அளவு:** ஒரு துளி

**அனுபானம்:** தக்கபடி

## இரத்தின மாணிக்கச் செந்தூரம்

நலந்திங்கள் முனிவர் சொன்ன
ரத்தின மாணிக்க மூன்று[1] பஞ்
சலவணங் காரய்த்த துரிசு
அரிதாரம் செந்தூ ரித்துக்

1 ........

கலங்கிய சூதம் கெந்தி
    இசைந்த மாணிக்க மூன்றும்
பலம்பேறு ஒவ்வொன் றுக்குப்
    பணவிடை யாகுந் தானே. 87

ஆனசாதி[1] லிங்கம் பத்து
    அரிதாரம் அஞ்சு காரம்
தானுயர் பத்து நல்ல
    தனுவொரு[2] பத்து எல்லா
ஊனமில்[3] லாமல் சுத்தி[4]
    யுகந்துசெய் தெடைகுன் றாமல்
கானுயர் செம்முள்ளிச் சாறு
    கலயமிட் டரைப்ப தாமே. 88

அரைப்பது சாமம் அப்பா[5]
    அது செம்மா துளைச்சாறு[6]
சாமம் எருக்கம் சாறு சாமம்தான்
    அரைத்த[7] தைத்தூள் ஆக்கி
மாறுபடா இசைந்த கும்பிக்கு
    ஏரேழ்[8] சீலைமண் வாகாய்ச் செய்து
திருத்தமாய்[9] உலர்ந்த பின்பு
    செய்துதூள் செலுத்து வாயே. 89

செலுத்துவாய் அரை மட்டுக்கும்
    செலுத்துவாய் பழுப்புக் கல்லால்
பலக்கவே அடைத்து மூடிப்
    பிசிக்காமல்[10] சீலைசெய்தே

---

1 ஆனதோர் லிங்கம் 2 நல்ல ஒரு 3 ஊனமிறுவாமல்
4 சத்தி உகந்து 5 ......... 6 செம்பித்தளையில்
7 பிசைந்தரைத்து 8 ஓரேழ் 9 திருத்தமாய
10 செயந்தூள் பிசகாமல்

மலைப்பதில் லாமல்வல்ல
வாய்ச்சட்டிதன்னில் மண்ணை
நிலைக்க[1] கால்விரலுக்கிட்டு
நேர்பதாய்க்குப்பி நாட்டே. 90

நாட்டிய குடமட் டுக்கு[2]
நன்மணல் மேலே கொட்டிப்[3]
பூட்டுதி விபரம் கேளு
புகலுவேன் தீபஞ் சாமம்
காட்டுவாய்க் கம லாண்டு
சாமங்கபாக் கிழி யாக
மூட்டு இருபத் தொன் று
சாமம் முழுகிய மூட்டே.[4] 91

முடிந்தபின் நாலாம் நாளில்
முக்கண்ணன்[5] தனைப்பூ சித்து
உகந்து[6] செந்தூரம் தன்னி
லோர்பண[7] எடையில் பாதிப்
புகழ்ந்துநாற் பதுநாள் தேனில்
பொடி திரிகடுகு கொண்டுண்ணக்[8]
கழிபடு மந்தார காசம்
சுவாசம் போமே. 92

பொங்கலு வாழைச்சாற்றில் புசித்திடப் பத்துநாள்தான்
தேங்கிய ரத்தப்புற்று[9] ஓடிவிடும் அடைப்புற்று[10]

---

1 வலப்பக்கம் 2 பிசகாமல் 3 மண்ணைக்கவாலுக்கிட்டு நேரதாய் குப்பி நாட்டே 4 நாட்டியக் குப்பிக்கு நண்மணல் 5 மேலே கொட்டிப் பூட்டு 6 தீப்பாங்கேடு 7 ஊட்டே 8 முக்கண்ணம் ஊமை 9 தன்முன் 10 ஒரு

வாங்கு செங்குருதிரோகம் வாய்கிழி ரத்தப்பாண்டு
தாங்கொணாக்காச ரோகந்தான் ரத்தழலம்[1] தீரும் 93

தீரும் முத்திருக்கம் செவ்வியும் கழற்சிச்[2] சாற்றில்
மேரையாய்த்தாக்கப் பணநாள் விரும்பியே அண்டபுற்று[3]
பாரிச அண்டபவுத்திர மண்டைப் புற்று[4]
நேரிசங்கள் வாதச்சூலை நெஞ்சுநோய் தீரும்பாரே. 94

பாருமே பொன்னாங்காணிச்[5] சாற்றினில் பண்பாய்க்
கொள்ள
வாரிபோல் விழுந்ததாது வார்த்திருக்கும் சன்னாசிக்கும்
நாரியாள் விருத்தசாது நலமுடன்போகம் உண்டாம்
ஊரினில் வேப்பம்பட்டைத் தயிலத்தில் உண்ணக்கேளே 95

உண்ண ஒரு பணத்துக்காம் உண்டிடில் குட்டரோகம்[6]
புண்குறைநோய் நாசிப்புண் வெடிசூலை நோய்கள்
விண்ணுதி[7] தருக்கன்கண்ட வெம்பிணி என்னநீங்கும்
புண்ணியமுண்டாம் பாவம்போம்[8] காயம் சித்தியாம் 96

**செய்முறை:** முனிவர் கூறிய ரத்தினம், மாணிக்கம் 3 பங்கு, துரிசு அரிதாரச் செந்தூரம், ரசம், கந்தகம் பண வெடை, லிங்கம் பத்து, அரிதாரம் 5 சவுக்காரம் பத்து பங்கு தனு ஒரு பத்து சுத்திசெய்ய வேண்டும்.

---

1 சுகம் 2 மண்டைப்புற்று 3 திரசாப்பு வாங்கு 4 ரத்தமுள்ளவை 5 செவிகளாச்சீலை 6 உண்ண ஒரு பணந்தான் ஊன் மயில் 7 விண்ணுகாருக் கண்டம் புளி எண்ணெய் நீங்கும் 8 புண்ணிய பாவம் உண்டாம் பொங்கா முத்தியாமே

எடை குன்றாமல் செம்முள்ளிச் சாற்றில் அரைத்துக் கலயத்திலிட வேண்டும். செம்மாதுளைச்சாறு, எருக்கஞ் சாறு இவற்றால் சாமம் அரைத்துத் தூள் ஆக்கி, ஏழுசீலை மண் செய்து உலர்த்த வேண்டும். பின் குப்பியிலிட்டு வலப்பக்கம் பலமாக மூடி வேறு ஒரு சட்டியில் மணல் கொட்டி அதில் குப்பியைக் கால் விரலுக்கு இட்டு வைக்கவும். தீயை 21 சாமம் எரிக்கவும். சம அளவாய். நான்காம்நாள் எடுத்துக்கொண்டு பத்திரப்படுத்தவும். இதுவே செந்தூரம் ஆகும்.

**அளவு;** பண எடையில் பாதி, பண எடை

**கால அளவு:** மண்டலம்

**தீரும் நோய்கள்:** மூலம், மந்தாரகாசம் தேன் திரி கடுகு, ரத்தப்புற்று, அடைப்புற்று, செங்குருதி ரோகம் ரத்தப்பாண்டு, சுரரோகம், ரத்த அழல்—வாழைச்சாறு அண்டப்புற்று, அண்டப் பவுத்திரம், மண்டைப்புற்று, வாத சூலை, நெஞ்சு நோய்—கழற்சிச்சாறு தாது உண்டாகும்—பொன்னாங்காணிச் சாறு பெண் போகம்—வேப்பம் பட்டைத் தயிலம் குட்டரோகம், புண், குறைநோய், நாசிப் புண், வெடிசூலை நோய்கள் போகும். உடல் வலிவு ஏற் படும்.

## காச குலாந்தகக் குடோரி

அட்டகாசங்கள் வரைகிறேன்[1] தன்னை
மட்டில்லாப்போக லோகம்தானும் வடிப்பமாய்ப் பலந்தான்
அஞ்சு

---

1 குடோரி புன்னை மட்டில்லா லோகந்தன்னை

பட்டிடாச்சூதம் ஒன்று பறைவிந்து ஒன்று
கெட்டியாய்க் காந்தம் இரண்டு கேள்பொரி காரம்ஒன்றே 97

ஒன்றிலும் பலமாடாமல் உபாயமாய்த் தூக்கிக்கொண்டு
நன்றாகைக்கழுஞ்சு தங்கம் நலமுடன்[1] பொடித்துக்
கூட்டின்
வென்றிடும் பழச்சாறு சாமம் ஈயக்[2] குமரிச்சாறுதானும்
குன்றிடச் சாமம் இரண்டு குலைநாவல் பட்டைமூன்றே. 98

பட்டைச்சாறு மூன்றுசாமம் எருக்கிலைச்சாறுநாலு[3] பழ
கட்டு மாதளைச்சாறு சாமம் கடிகை என்றினும் தப்பாமல்
திட்டமாய் அரைத்துநன்றாய்ச் செய்திடு[4] அடைக மைந்தா
சட்டமாய் உலரவைத்துச்[5] செய்திடு அடைகமைந்தா. 99

தேடுகற் றாழைச்சாற்றைச்[6] சிறக்கநூல் விரலுக்கிட்டுப்
போடுநீ நவ்வல்பட்டை இடித்தது நால்விரல்போடு
வாடு[7] நல்லாடையை வைத்துப் பருபடி[8] பட்டைக்[9]
கொண்டு
மூடிமேற் குமரிச்சோற்றை மூடிமேற்சட்டி வையே. 100

வைத்தொரு சீலைமண்ணேழ் மார்க்கமாய்ச் செய்துலர்த்திப்
பக்தியாய் அடுப்புக்கேற்றிப் பரம்[10] சுடர் தன்னைப்
போற்றிச்
சுத்தியாய்த்[11] தீபமிட்டுச் செய்யநற் கமலமெட்டு
மொத்த காலாக்கினி எட்டுடன் சாமம்மூவெட்டாமே. 101

---

1 ......... 2 வீறுடன் 3 நாலு சாமம் 4 அய காந்தம் 5 சட்டமாயிலாப் போட்டுத் தாழ்வாய்ச் சட்டிதேடே 6 எடுக்க அள்ளு சொத்தை 7 போடு எடு 8 உருட்டி 9 ......... 10 பரமனார் 11 சித்தியாம்

மூவெட்டுச் சாமம்தான் முயன்றெரித்து ஆறவிட்டுப்
பூவெட்டு[1] மருந்தைமெத்தப்[2] புணர்ந்தரைக்[3] குமரிச்
சாற்றால்
நாஒத்த நவ்வல்பட்டைச் சாற்றினால் முருக்கம்
சாற்றினாலே எட்டுச்
சப்பட்டைச் சாற்றினால் முருக்கம் சாற்றினாலெட்டுச்
சாமம்ஆட்டி இசைந்த பின்னடை. போல்[4] செய்யே. 102

செய்திடு முன்போல்தானும் தீர்க்கமாய் மண்ஏழ்செய்து
பையவே உள்ளங்கால் மட்டும் பாவிடுமேரு மேற்சட்டி
ஐயமில்லாமல் வைத்து வதிகச புடத்தைப்போட்டுச்
செய்யவே ஐங்கரனைப்போற்றி வேண்டியே எடுத்துக்
கொள்ளே. 103

எடுத்தொரு பணந்தான் தூக்கிஇடு திரிகடுகுத் தூளில்[5]
அடுத்திரு பதுநாள் உண்ண அட்டகாசம் போகும்
தொடுத்தமந் தாரகாச சுவாசம் காசங்கள் பாண்டு
விடுத்தொரு காசம்போகும் மேன்முனி விளம்பினாரே. 104

**செய்முறை:** லோக மண்டூரம் 5 பலம், சூதம் கெந்தி 1 பலம், காந்தம் 2 பலம், தங்கம் கழஞ்சு இவற்றைப் பொடி செய்து, கற்றாழைச் சாற்றில் 2 சாமம், நாவல்பட்டைச் சாற்றில் 3 சாமம், பழ எருக்கிலைச்சாறு 4 சாமம் மாதுளைச்சாறு கடிகை தப்பாமல் அரைத்து, அடை தட்டித் தாழ்வாய் சட்டியில் வைக்கவும். கற்றாழைச் சோற்றை விரல் அளவும், நாவல் பட்டைப் பொடியை 4 விரல் அளவும் வைத்துக்கொண்டு அடையை நடுவில்

---

1 வீட்டுப்பூ 2 ஏத்த 3 பூணுரை 4 மண்
5 தூள்

வைத்துக் குமரிச் சோற்றால் மூடிச் சீலைமண் செய்ய வேண்டும்,

உலர்ந்தபின், அடுப்பிலேற்றிச் சாமம் காலாக்கினியாய் எரிக்கவேண்டும். 24 சாமம் எரித்து. ஆறவிட்டுக் குமரிச் சாறு, நாவல்பட்டைச்சாறு, எட்டெட்டுச் சாமம் அரைத்து அடையாக்கி, 7 சீலைமண் செய்து, கஜபுடமிட்டு எடுக்கவும். இதுவே கூடிய குலாந்தகச் செந்தூரம் ஆகும். ஐங்கரனைப் பூசை செய்தல் வேண்டும்.

**அளவு:** பண எடை

**கால அளவு:** 20 நாட்கள்

**தீரும் பிணிகள்:** காசம் எட்டு. காச சுவாசம், பாண்டு

## பூநீறு திராவகம்

ஆதிஎன்ற கறியுப்பு வளையுப்பு
அரன் அமரியும்மதியுப்பு வெடியுப்பு
வாதி என்றோர் அறியாத கல்லுப்போடு, ஐந்து வகை
வகையாய் வாங்கிக் கொண்டு
வேதி என்ற உவர்உப்பு நாயுருவி உப்புமிஞ்ச
வகைக்கொரு பலமாய் வாங்கிக் கொண்டு
சாதிஎன்ற சவுக்காரம் சீனிக்காரந்தான்
வகைக்குப் பலமொன்று சாற்றினாரே. 105

சாற்றியதோர் பொரிகாரம் சீனிக் காரம்
தப்பாமல் இதுவகைக்குப் பலந்தான் கால்
மேற்றியரே அச்சாரம் சத்திச் சாரம்
இனியவகையில் வள்ளி எலுமிச்சம் சாறு

மாற்றியதோர் நவச்சார அன்னபேதியாக
அஞ்சும் வகை வகைக்குப் பலந்தான் இரண்டாய்
ஏற்றிய துத்தம் துருசு சூதமுடன்காயம்
அஞ்சு வகைக்கு அரைபலமாய் வேண்டித்தேடே. 106

தேடப்பா இதுவகைக்குப் பலந்தான்
காலாய்ச் சேர்ந்த மருந்தனையும் இடித்துச்சேர்த்து
காடப்பா வட்டாரத் தாழிக் குள்ளே
கல்பற்றின நீர்நாழி வைத்து
வாடப்பா ரவிபுடமாய்ப் பத்துநாளும் வைத்த
மருந்தைக் குடத்தில் வாங்கித் தாக்கே. 107

தாக்கப்பா யந்திரத்தின் குடத்துவாய்ச் சந்துவாய்க்குள்
வருநீரை வாங்கிப் பீங்கான்
நோக்கப்பா பொரிமா விரவி நெய்யினும் நுகரதால்
கட்டியினில் பழத்தில்ல மத்தி
தேக்கப்பா பணம்போல நாரைக் கொள்ளச்
செப்பரிது இதன்பெருமை செப்பக்கேளே. 108

கேளப்பா நவலோகத்தோடு வண்டாங் கெடியான
சரங்கமுதல் சரக்கெல்லாம் நீரு
மாளப்பா கரைந்தோடும் மலையும் நீறும்
மகத்தான திராவகத்தை வைத்தவனே கதி
சூளப்பா இத்தை அருந்திடத் தீரநோய்கேள்
சொல்லரியநீரும் பல்பாண்டு சோகை
தாளப்பா பெருவயிறு பசவு கொண்டை
சலம் பிறங்கிருத்தி முதல்மகோதரம் போமே, 109

போமப்பா வட்டிவிகைக் குன்மம் எட்டும்
　　புரிந்தேகும் குடல்வாதம் கோதை வாதமாம்
தாமப்பா குடகரியின் பிலிகையின்
　　சூலை யானைவலி சூசிகாணந்தவாயு
போமப்பா விஷபாகம் தீரும் கட்ட
　　உத்தமனே சன்னிமுதல் எண்பது வாதம்
தாமப்பா நீரைக்குக் கழலைப் புற்று
　　காணக் கரையுநீதற்குச் சாற்றினோமே. 110

**செய்முறை:** கறியுப்பு, இந்துப்பு, வெடியுப்பு, உவர் உப்பு, சவுக்காரம், சினிக்காரம் வகைக்கு 1 பங்கு யவச்சாரம் சத்திச்சாரம், நவச்சாரம், அன்னபேதி பலம் 2, எலுமிச்சம் பழச்சாறு பலம் 2, துத்தம், துரிசு, காயம் ½ பலம்.

இவற்றை எடுத்துக்கொண்டு கால் பங்கு மருந்தை வட்டத் தாழியில், 1 நாழி நேரம் எரித்தெடுக்கவும். பின் ரவிபுடத்தில் பத்து நாட்கள் வைக்கவும். பின்னர்க் குடத்தி லிட்டு, வாலுகாயந்திரத்தில் உள்ளே வைத்துச் சீலை மண் ஏழு செய்து உலர்த்திக் கடிகை நேரம் எரிக்கத் திராவகம் கிடைக்கும். இதுவே பூநீறு திராவகம் ஆகும்.

**தீரும் நோய்கள்:** பாண்டு, சோகை, பெருவயிறு கெண்டை, நீர்ரோகம், மகோதரம், குன்மம் எட்டு, யானை வலி, குடல்வாதம், சூலை, சன்னி, 80 வாதம், நீரடைப்பு கழலை, புற்று.

**அனுபானம்:** பொரிமாவு, நெய்

**குறிப்பு:** நவலோகம் முதல் சங்குவரை எல்லாச் சரக்குகளும் இத்திராவகத்தில் பற்பமாகும்.

முற்றும்

## பாடபேதம்

(105 முதல் 110 வரை பாடபேதம் உள்ளதான பாடல்கள் இடம் பெறுகின்றன)

சரக்கெல்லாம் கருஞ்சரக்கு எமது சரக்குமுண்டு
சாதகமாய்ப் பாடவென்றால் குணந்தான் காணும்
தாக்கிலே சதுரக்கள்ளிப் பாலால் அரைத்
தாக்கிஅந்த வெள்ளைச் சுருக்குப் போட்டு
நீறாக்கியே பூநீறு காரம் காரம்
நேராக அரைத்து மேல்கவசம் கட்டே. 106

கட்டியறிதகரி ஓட்டிலே ஆட்டு வாட்டு
கைமுறையாய் வெள்ளயதுப்பா ருசிக்கட்டு
மூட்டியதோர் செய்தே சாரங் கூட்டி
முதிர்ந்திருக்கு வெண்கார மாகக் கூட்டி.
ஓட்டிலே கவசமிட்டு நன்றாய் வாட்டு
உத்தமனே வெள்ளையது உருவாய்க் கட்டும்
ஆட்டியந்த வெள்ளை ஒன்று வங்கம் ரெண்டில்
செத்துடனே நீர்வற்றித் தெரிக்கும் தானே. 107

சேரப்பா இதுஒன்றும் அதுவும்தூளாம் மரித்தொரு
வெள்ளிஎடை சூதம்போட்டு மாட்டுஇந்த ரெண்டுகதி முத்துவெள்ளை
நெரித்தொடு முன்பாலில் நீரை வார்த்து
நேராக அரைத்து நன்றாய் உருட்டிக் கட்டிப்
பொரித்தொரு உண்டையின்மேல் இலக்கம் கூட்டிப்
பொங்கியதோர் வெங்கார மேலே பூச. 108

பூசியது மேலைந்து சிலை செய்து
புகழாக உண்மையின்மேல் மணலைக் கொட்டி
மாசதியின் மேலிக ஈசானத்தில்
வயிரவர்க்குப் பூசையிட்டுப் புடத்தைப் போடு
காசினியோர் மெச்சியதற்குக் குருவே யாகும்
காட்டப்பா வங்கத்தில் நூற்றுக் கொன்று
வேரை ரசவாத வெள்ளி வித்தை
பதினாறு மாற்றுத் தானே. 109

முற்றும்

## மருந்து செய்முறைகள்

IITS T. லலிதா

**குழம்பு:** சிறு சாறுகளைக் கலந்தாவது, தனிச் சாறாகவாவது ஒரு சட்டியிலிட்டுச் சர்க்கரை கூட்டிச் சில சரக்குகளைப் பொடி செய்து, துணியில் கட்டி, அதில் போட்டுக் குழம்பு பக்குவத்தில் காய்ச்சி வடித்து எடுத்துக் கொள்ளுவதாகும்.

**சான்று:** எலுமிச்சம் குழம்பு—5 ஆண்டுகள் வரை வன்மை உள்ளது.

**செந்நூரம்:** இது உலோகங்களையேனும், பாடாணாதிகளையேனும், சில இலைச்சாறுகளாலாவது உப்புநீர் அல்லது செயநீரில் அரைத்துப் புடம் போட்டு அல்லது வறுத்து அரைத்து, வெய்யிலில் வைத்துச் சிவக்குமாறு செய்து எடுத்துக்கொள்ளுவதாகும்.

| | | |
|---|---|---|
| 1 | எரித்து எடுப்பது | பூரண சந்திரோதயம் |
| 2 | வறுத்து ,, | அயவீரச் செந்தூரம் |
| 3 | அரைத்து ,, | சண்ட மாருதச் ,, |
| 4 | அரைத்து சூரிய புடம் வைப்பது | சுயமாக்கினிச் ,, |
| 5 | மற்றச் செந்தூர வகைகள் | காந்தம் அப்ரகம் |

என்பன செந்தூரம் 75 ஆண்டுகள் வன்மை உள்ளவை

## புடம்

| | | | |
|---|---|---|---|
| 1 | காடைப்புடம் | — 1 | எரு |
| 2 | கவுதாரி | — 3 | ,, |
| 3 | குக்குட | — 10 | ,, |
| 4 | வராக ,, | — 50 | ,, |
| 5 | மணல்மறைவு புடம் | — 90 | ,, |
| 6 | மயிற் ,, | — 100 | |
| 7 | கன ,, | — 800 | |
| 8 | கஜ ,, | — 800 | |
| 9 | பூமி ,, | — ஆட்டு எருவில் 4 விரற்கிடை | |
| 10 | தானிய ,, | — நெல்லில் வைத்தல் | |
| 11 | சூரிய (ரவி) ,, | — வெய்யிலில் ,, | |
| 12 | சந்திர ,, | — சத்திர ஒளியில் வைத்தல் | |
| 13 | பனிப் ,, | — பனியில் ,, | |
| 14 | பருவ ,, | — முழு நிலவில் திறந்த வெளியில் வைத்தல் | |

பாத்திரம்:

*1* குடுக்கை, மூங்கில் பரணை, தந்தம் முதல் தரம்

2 வெங்கலம், கருத்த இரும்பு, மரம் இரண்டாம் தரம்

அளவு:

| | | |
|---|---|---|
| *1* குன்றி | — | *130* மி. கி. |
| *1* பணம் | — | *478* ,, |
| *1* காசு | — | *165* ,, |
| *1* வராகன் | — | *4.2* கிராம் |
| *1* பலம் | — | *35* ,, |
| *1* கழஞ்சு | — | *5.1* ,, |
| *1* குறுணி | — | *5.3* லிட்டர் |
| *1* தூணி | — | *21.5* ,, |
| *1* படி | — | *1.3* ,, |
| 1 துலாம் | — | *3.5* கிராம் |
| *1* சாமம் | — | *3* மணி நேரம் |



# சொல்லடைவு

## க

## கா



## கி



## கீ

### கு



### கெ

## சீ



## சு



## சூ

### மா



### மி



### மு

மூ



மே



மோ



லோ



வ

## வீ



## வெ



## வே





# நோய்கள் பட்டியல்

## அ

அசிரணம்
அட்டகாசம்
அட்டகாசங்கள்
அட்டகுன்மம்
அடைப்புற்று
அண்டப்புற்று
அண்டவாதம்
அத்திசுரம்
அரையாப்பு
அரையாப்புப் புண்கள்
அரோசகம்

## இ

இரத்தகாசம்
இரத்தப்பாண்டு
இரத்தப்புற்று
இருமல்
இளைப்பிருமல்
இளைப்பு

## ஈ

ஈளை

## உ

உளமாந்தை

## எ

எரிகுன்மம்
எலிக்கடி

## க

கர்ப்பநோய்
கர்ப்பவினை
கல்லடைப்பு
கடினசுரம்
கடி
கழலைப்புற்று
கபாலச்சூலை

## கா

காசஈளை
காசநோய்கள்
காசம்
காசம்எட்டு
காசிப்புண்
காமாலை
கால்கடுப்பு

## கி

கிராணி
கிறுகிறுப்பு

**சோ**

சோகை

**த**

தசைவாயு
தனுர்வாதம்

**தொ**

தொடைவாதம்

**தோ**

தோஷம்

**நா**

நாசிப்புண்
நாபிச்சூலை

**நீ**

நீர்க்கடுப்பு
நீர்க்கோவை
நீர்மேகம்
நீரடைப்பு
நீரிழிவு

**நெ**

நெஞ்சுநோவு
நெஞ்சுவலி

**ப**

பக்கவலி
பக்கவாதம்
பதறுசன்னி
பவுத்திரம்

**பா**

பாண்டு
பாண்டுரோகம்
பாவநோய்கள்

**பி**

பிறநீர்க்கோவை
பிறவலிப்பு

**பீ**

பீலிகை
பீனிசம்

**பு**

புண்
புற்று

**பெ**

பெருவயிறு

## சரக்குகள், பற்ப, செந்தூர வகைகளின் பட்டியல்

| சரக்குகள் | | உலோகவகை |
|---|---|---|
| 1 | பொன் | — Aurum |
| 2 | வெள்ளி | — Argentum |
| 3 | இரும்பு | — Ferrum |
| 4 | செம்பு | — Cuprum |
| 5 | காரீயம் | — Black Lead |
| 6 | வெள்ளீயம் | — Lean (Stannum) |
| 7 | காந்தம் | — Load Stone |
| 8 | நாகம் | — Zincum |
| 9 | அப்ரகம் | — Mica |
| 10 | மண்டூரம் | — Ferro-Ferric Oxide |

### பாடாணம்

| | | |
|---|---|---|
| 1 | லிங்கம் | — — Cinnabaris Pactitia Chinensis |
| 2 | கெந்தி | — Sulphur |
| 3 | மனோசிலை | — Arsenicum Rubrum |
| 4 | துத்தம் | — Sulphas Zinci |
| 5 | துருசு | — Cupri Sulphas |
| 6 | சூதம் | — Hydrargyrum |
| 7 | தாளகம் | — Tri Sulphuret of Arsenic |

### உப்பு

| | | |
|---|---|---|
| 1 | யவச்சாரம் | — Pottassium Corbonas Impura |
| 2 | வெங்காரம் | — Sodit Biboras |

| | | | |
|---|---|---|---|
| 3 | இந்துப்பு | — | Sodium Chloride Impura |
| 4 | பூநீறு | — | Soda Carbonate |
| 5 | கல்லுப்பு | — | Sodium Chloridum Impura |
| 6 | வளையலுப்பு | — | |
| 7 | அன்னபேதி | — | Feeri Sulphas |
| 8 | சவுட்டுப்பு | — | |
| 9 | வெடியுப்பு | — | Pottassium Nitras |
| 10 | நவச்சாரம் | — | Ammonium Chloride |
| 11 | படிக்காரம் | — | Alumen |
| 12 | சத்திச்சாரம் | — | |
| 13 | கறியுப்பு | — | Sodium Chloridum |

| | பற்ப வகைகள் | | | செந்தூரம் | |
|---|---|---|---|---|---|
| 1 | தாமிரப்பற்பம் | | 1 | வெள்ளிச் செந்தூரம் | |
| 2 | சொர்ணப்பற்பம் | | 2 | வெங்கல | ,, |
| 3 | வெள்ளி | ,, | 3 | அய | ,, |
| 4 | வெங்கல | ,, | 4 | காரீய | ,, |
| 5 | பித்தளை | ,, | 5 | வெள்ளீய | ,, |
| 6 | காரீய | ,, | 6 | காந்த | ,, |
| 7 | வெள்ளீய | ,, | 7 | நாக | ,, |
| 8 | காந்த | ,, | 8 | ரச | ,, |
| 9 | மிருதாசிங்கி | ,, | 9 | காளமேக நாராயணச் செந்தூரம் | |
| 10 | அரிதார | ,; | 10 | சந்திரோதயம் | |
| 11 | ரச | ,, | 11 | வாதராட்சதன் | |
| 12 | வைர | ,, | 12 | சுரமாக்கினி | |
| 13 | மரகத | ,, | 13 | மண்டூரம் | |
| 14 | கோமேதக | ,, | 14 | திரிலோக | |

| | | | | |
|---|---|---|---|---|
| 15 | வயிடுரிய | ,, | 15 | ரத்தினமாணிக்க |
| 16 | லோக | ,, | 16 | காசகுலாந்தகக் குடோரி |
| 17 | பூர | ,, | | |
| 18 | அப்ரக | ,, | | **திராவகம்** |
| 19 | கந்தக | ,, | | |
| 20 | பவள | ,, | 1 | மகா திராவகம் |
| 21 | முத்து | ,, | 2 | பூநீறு ,, |

***தீநீர்:*** இருவகைப்படும். வாலையிலிட்டுத் தண்ணீர் சேர்த்து, எரித்து இறக்குவது. 2. உப்பு வகைகளை வாலையிலிட்டு எரித்து இறக்குவது. இது புகைநீர் அல்லது திராவகம் எனப்படும்.

**பற்பம்:** இது உலோகம், பாடாணம், உபரசம் இவைகளில் ஏதேனும் ஒன்றைச் சில இலைச்சாறுகள் அல்லது உப்புநீர், அல்லது செயநீர் இவற்றால் அரைத்துப் புடமிட்டு அல்லது வறுத்து அல்லது எரித்து அல்லது ஊதியேனும் வெளுக்கச் செய்வது. 100 ஆண்டுகள் வன்மை உள்ளது.

***சீலை:*** ஒரு சுத்தமான அழுத்தமான துணியில் மிருதுவாக அரைத்த புற்று மண் அல்லது செம் மண்ணையோ ஒருபக்கத்தில் தடவி, மருந்து எரியவைக்கும் பாத்திரங்களைச் (குப்பி, அகல், குகை) சந்து தெரியாமல் சந்தின்பேரில் சுற்றி உலரவைப்பது.

புற்று மண்ணுக்குப்பதில், கோதுமை மா, உளுத்த மா மாக்கல் மா என்பனவும் பயன்படுத்தலாம்.

### தீயளவு

1. **தீபாக்கினி:** (1 விறகு-2 விரல் கனம்) விளக்கின் சுடர் போல எரியும்
2. **கமலாக்கினி:** (2 விறகு) தாமரையைப்போல் எரியும்
3. **கதலியாக்கினி:** (3 விறகு) வாழைப்பூவைப்போல் எரியும்
4. **காடாக்கினி:** (4 விறகு) மிகுதியான அளவு தீ உள்ளது

| | | |
|---|---|---|
| அத்தி | — | Ficus Glomerata Roxb |
| அரசு | — | Ficus Religiosa Linn |
| ஆடாதோடை | — | Ada Toda Vasica Nees |
| இலுப்பை | -- | Bassica Longfia Linn |
| இலைக்கள்ளி | — | Euphorbia Nertifolia Linn |
| உசிலைமரம் | — | Mimosa Amara Rox B |
| ஊமத்தை | — | Thorn Darura Alba Nees |
| எருக்கு | — | Calofropis Gigantea R. B. R |
| எலுமிச்சம்பழம் | - | Citrus Acidia Roxb |
| கண்டங்கத்திரி | — | Solanumx Anthocarpum Schard |
| கரந்தை | — | |
| கரிசாலை | — | Eclipitaabla Hassll |
| கருஊமத்தை | — | Datura Fastuosa Linn |
| கருவேலம்பட்டை | — | Acacia Arabica toilld |
| காஞ்சோறி | — | Tragina Involucrata Linn |

| | | |
|---|---|---|
| கீழ்க்காய்நெல்லி | — | Phyllanthes Niruril inn |
| குப்பைமேனி | — | Acalypha Indica Linn |
| கொட்டைக்கரந்தை | — | |
| சித்திரமூலம் | — | |
| சிறுகீரை | — | |
| சிறுபுள்ளடி | — | Desmodiun, Trifolium G. Don |
| சீந்தில் | — | Tinospara Cordifolia Miers |
| செண்பகம் | — | Michulia Champeca Linn |
| செம்முள்ளிச்சாறு | — | |
| செருப்படி | — | Mollugo lotoides O. Kez |
| தாமரை | — | Nelumbium Speciosu Willd |
| தாழை | — | Pandanus Odora Tissimus Willd |
| துத்தி | -- | Abutelon Indicum G. Don |
| தும்பை | — | Leucas Aspera Spreng |
| தூதுவளை | - | Solanum Trilobatum Linn |
| நந்திவட்டை | -- | Tinospora Cordifolia Miers |
| நாயுருவி | — | Achyranthes Asperalan |
| நாவல் | — | Eugewia Jam Bolinalam |
| நிலக்குமிழ் | — | Gnelina Asiatica Linn |
| நீர்முள்ளி | — | Hygrophila Spinosa J. Arnd |
| நொச்சி | — | Vitexnegundo Linn |
| மஞ்சள் | — | Curcuma Aromatica Salisb |
| மாதளை | — | Punica Grantum Linn |
| மிதிபாகல் | — | Momordica Muricata |

முருங்கை — Moringa Petrigosperma Goertin

வள்ளி — Dioscorea Alata Lam

வெள்ளெருக்கு — Adenema Hissopi folia

வெற்றிலை — Piper Betle Linn

## மருந்தின் பாகம்—அங்காதி பாகம்

மின்னனாய் மருந்தின்பாகம் விழியினில் நாலுதுள்ளித்
துன்னவே நையமாறுதுள்ளிகா தினிறு மாறு
உன்னிடு குழம்புலேகிய முருகுங்கை அளவாய்கொள்ளு
பன்னுகண் டுடமத்தில் பாதிபக்குவாய்ப் பண்ணே. 1

பக்குவமாய்க் குடிநீர் பகர்கைக் கொண்டவைதாகும்
நெக்குறு சூரணங்கள் வெருகடி நிறையதாகும்
தொக்குறு குளிகை நன்மாத்திரைகள் சொன்னள வவர் கொள்க
மிக்கவஞ்சனமு முந்தின் பாதியாய் விழியிற்றிட்டே. 2

## குகைத் திட்டம்

பண்டிதநூலில் சொன்ன குகைத்திட்டம் பகரக்கேண்மின்
கண்டிடு மிருப்புக்கிட்டமு மிக்கருக்காடை சாம்பார்
விண்டிடு கழுதைலத்தி வெவ்வேறு பலமிரண்டாய்
நண்டுறு குழிமண்ணிரெண் பலமதாய் நாட்டிஆட்டே.

## பஞ்ச சுண்ணக் குகை

ஆட்டியே கடுக்காய்தன்னை அவித்தநீர்விட்டு மைபோல்
மாட்டியே குகையும்சில்லும் வரிசையாய்ப் பிடிப்பதாகும்
தீட்டியேவைத்துச் சுண்ணக் குகையைக்கேள் சிப்பியண்டத்
தோட்டுடனத்தை நண்டு சங்கைந்து மொக்கக்கூட்டே

ஒக்கவே சமனாய்க்கூட்டியோ டுருக்கம் பாலாட்டி
மிக்கவட்டமாய்ப் பிடத்தில் வெற்றுச் சுண்ணாம்பதாகில்
குக்குடத் தண்டவெள்ளை எருக்கம்பால் கொண்டுமைபோல்
சிக்கென வரைத்தெடுத்துக் குகையுடன் சில்லுஞ்செய்யே.

## மருந்துண்ணும் நாள்

அண்ணிய பூசஞ்சோதி அவிட்டம் சித்திரையேயோணம்
பெண்ணமான் தலையும் ரோணிபேசிய சதயமந்தம்
எண்ணி முந்திரங்கண் மூன்றுமிரேபதி பதிநாள்புந்தி.
நண்ணு பொன்வெள்ளி சோமனாயிறு மன்னியாமே.

கன்னியே மகரமேடாங் கற்கடகந்துக் கென்னும்
மன்னுமிந் நாட்கடம்மின மருந்தையுட ருந்துவீரேல்
இன்னல் செய்வாதபித்த சிலேற்பனத் தெழுந்துசாரும்
சொன்ன வெம்பிணிகள் நீங்கிச் சுகம்பெற்று வாழுவாரே.

## உணவு கொள்ளும் முறை

திருத்தமாய்ப் போசனங்கள் செய்திடு முறையைக்கேளாய்
பருத்தவுந்தியினை நான்குபங்கது வாகக் கண்டே
அருந்துநீ இருகூறன்ன மப்பொரு கூற்றாக
விருந்தொரு கூறுவீணில் விடுவது மேன்மையாமே.

மேன்மையாம் போசனங்கள் மிகுசுவையமு தொப்பென்னும்
பான்மையா யருந்திநூறாய்ப் பகரடி நடந்துபின்னர்
வான்மிகு தாம்பூலங்கண் மரபினாற்றுய்த்தது மஞ்சத்
தேன்மலி குழலாரொடு துயில்பவர்க் கில்லைநோயே.

நோயிலையாங்கி நீர்கால் நுடங்குடம் பொத்துநிற்கில்
ஆயுவுஞ் சுகமுண்டா மன்மைப்படை விற்சேரும்
ஏயசிந்தையினி லின்பமிசைந்திடு மகிழ்ச்சி எய்தும்
சேய்மலை வாழ்வினொடு செல்வமுஞ் சிறக்குமன்றே.

## தேரையர் காப்பியம்—மருந்தால் ஏற்படும் கேடுகள்

வேர்த்திடும் சிலிர்த்திடும் மெய்கடு கடுத்திடு
மார்த்திடு மந்திக்கு அசதி மேலிட்டிடு
மூன்மத்த மாயிடு உரை தடுமாறிடு
மின் மத்தமாம் என ஓங்கிடச் செய்திடும்

## அகத்தியர்—12000 கூறும் மூலிகைகள்

1 வாரமூலி
2 பட்சமூலி
3 திங்கள்மூலி
4 ஓராண்டுமூலி
5 ஈராண்டுமூலி
6 பத்தாண்டுமூலி
7 பஞ்சதசவாண்டுமூலி
8 சோடசாண்டுமூலி
9 இருபதாண்டுமூலி
10 நாற்பதாண்டுமூலி
11 அறுபதாண்டுமூலி
12 எண்பதாண்டுமூலி
13 நூறாண்டுமூலி

## கற்ப வகை

1 ஆனந்த கற்பம்
2 காயக்கற்பம்
3 யானைமலை அயிராவத காயக்கற்பம்
4 தாமரைக்கற்பம்
5 பொதிகமலை காயக் கற்பம்
6 ரோமரிஷி கற்பம்

## வார மூலி

காணவே சித்தர் மகத்துவங்கள்
கணிதமுடன் வாரத்துக்கொரு நாளப்பா
பூணவே மூலியது உண்பார் பாரு
புண்ணியனே பசியதுவும் தானில்லை
நாணவே பசிவந்த போதிலப்பா
நலமான மூலியது கொள்வார்பாரு
வேண்டவே தவயாகம் செய்துமல்லோ
வித்தகனே மலைமீதிருப்பார் பார்பாரோ.

## பட்ச மூலி

இருக்கவே இன்னமொரு மார்க்கம் சொல்வேன்
எழிலான புலத்தியனே இன்புள்ளானே
பொருக்கவே சில தேவர் இருடிகளப்பா
பொங்கமுடன் மலைமீதில் தானிருக்கும்
வருக்கமுடன் பட்சத்துக்கொரு நாளப்பா
வன்மையுடன் பசிவந்தபோதில் தானும்
பெருக்கமுடன் மூலியது கொள்வாரப்பா
பேரான தவயோகி உண்டுதானே

உண்டான சித்து முனிஇருடி தானப்பப
உத்தமனே பொசிப்பதுவு யாருமில்லை
விண்டிடவே பசிவந்த போதில் தானும்
விருப்பமுடன் மூலியது கொள்வார்பாரு
தண்டகம்போல் பட்சத்துக்கொரு நாளப்பா
தாரணியில் மூலிகற்பங் கொண்டுமேதான்
சண்ட மாருதம் போலே தவமிருப்பார்
தவசிமகா இருடியர் என்னலாமே

## உப்பு

1 **அன்னபேதி:** பலகாரி, ருதுவர்த்தனகாரி. கிருமி நாசனி சங்கோசன காரி

2 **இந்துப்பு:** மலகாரி, நாசிநீர் விருத்தினி, ஜ'டராக்கினி வர்த்தினி

3 **யவச்சாரம்:** மலசாரி, சிறுநீர்பெருக்கி, பசித்தீ தூண்டி

4 **வெடியுப்பு:** குளிர்ச்சி உண்டாக்கி, மூத்திர பெருக்கி தாதுநட்டம் போக்கி

5 **கல்லுப்பு:** கிருமிநாசனி, தாதுநட்டம் போக்கி

6 **கறியுப்பு:** மலம் போக்கி, வாந்தி உண்டாக்கி, கிருமி நாசனி

7 **சீனாக்காரம்:** குருதி அடக்கி

8 **பூநீறு:** சிறுநீர் பெருக்கி

9 **வளையலுப்பு:** மூத்திரம் பெருக்கி

10 **வெங்காரம்:** குளிர்ச்சி உண்டாக்கி. மூத்திரம் பெருக்கி, ருது உண்டாக்கி

## பாடாணம்

1 **ரசம்:** மலகாரி, பித்தகாரி, உக்கிரரோக சமனகாரி வியாதாபேதகாரி

2 **லிங்கம்:** வியாதாபேதகாரி, சுரஹரஹாரி

3 **கந்தகம்:** கிருமிநாசனி, இலகுமலம்போக்கி

4 **தாளகம்:** சுரம் போக்கி. வாந்தி உண்டாக்கி

5 **துத்தம்:** வலிவு உண்டாக்கி, வாந்தி உண்டாக்கி

6 **துரிசு:** சிறிய அளவில் வலிவு உண்டாக்கி, பெரும் அளவில் வாந்தி உண்டாக்கி, விரணம் போக்கி

7 **நவச்சாரம்:** பித்தம் உண்டாக்கி, உற்சாகமூட்டி

8 **மனோசிலை;** சுரம் நீங்க, கபம் நீக்கி

## உலோக வகை—மருத்துவப் பயன்கள்

1 **அப்ரகம்:** பலகாரி, காமவிருத்தினி, வியதா பேதகாரி

2 **இரும்பு:** பலகாரி, சங்கோசனகாரி, வியதா பேதகாரி

3 **காந்தம்:** பலம் உண்டாக்கி, பசித்தீ தூண்டி

4 **காரீயம்:** பசித்தீ உண்டாக்கி, தாது நட்டம் போக்கி

5 **செம்பு:** சிறிய அளவில் வாந்தி உண்டாக்கி, தாது நட்டம் நீக்கி

6 **தங்கம்:** பலம் உண்டாக்கி, தாது உண்டாக்கி

7 **நாகம்;** குருதிப்பெருக்கடக்கி

8 **பித்தளை:** வலிவு உண்டாக்கி, காமம் பெருக்கி சமனகாரி

9 **மண்டூரம்:** பலகாரி

10 **வெங்கலம்:** வலிவு உண்டாக்கி, பித்தகாரி

11 **வெள்ளி:** வலிவு உண்டாக்கி, சமன் உண்டாக்கி

12 **வெள்ளீயம்:** வலிவு உண்டாக்கி, சமன் உண்டாக்கி

## கொடி

**வல்லாரை:** அக்கரம், வயிற்றிழிவு, கடுப்பு போகும்

**கையான்:** குரல் கம்மல், காமாலை, குட்டம், சோபை போகும்

**கற்றாழை:** மேகம், புழு, சூலை, குட்டம் போகும்

## புல் வகை

**அறுகம்புல்:** வாதம், பித்தம், ஈளை, தலைநோய், ரத்த பித்தம் போகும்

## மரம்—சமூல குணம்

**பூவரசு:** குஷ்டம், புழுத்தபுண் போக்கும். பேதி உண்டாக்கும்

**முருங்கை:** (பிஞ்சு) திரிதோஷம் போக்கி, காமம் பெருக்கி

## கீரை

**சிறுகீரை:** கண் புகைச்சல், நேத்திர நோய், காசம் படலம், புண், சோபை போக்கும்

## பூ

**தாமரை:** வாந்தியைப் போக்கும், பல் நோயைப் போக்கும்

## பிஞ்சு

**மாதுளை:** கழிச்சல் போக்கும்

## காய்

**எலுமிச்சை:** முத்தோஷம், கபம், சூலை, வாத கபம் போக்கும்

**பழம்:** வாந்தி, பொருமல், தாகம் போக்கும்

## மரவகை

**புரச மரம்:** வாதம், பித்தம், கிருமி, கிராணி, பெருவலி நோய் போக்கும், பசித்தீ உண்டாக்கும்

**மலை வேப்பமரம்:** மலட்டுப்புழு, வயிற்றுவலி, வாயு போகும்

**வேப்பு:** சுரம், மூலம், கணம், பூச்சி, மலக்கட்டுப் போகும்

## செடி

**கண்டங்கத்திரி:** காசசுவாசம், சயம், மந்தம், சுரம் சன்னி போகும்

**நீர்முள்ளி:** பாண்டு (நீர்), நீரேற்றம், நீர்க்கட்டு, வீக்கம் போகும்

**ஊமத்தை:** நாய்கடி, விரணம், குழிப்புண், கட்டி போகும்

**கரு ஊமத்தை:** சுரம், குட்டம், செய்சுரம் போகும்

**சிறுபீளை:** நீர்ப்பாண்டு, பெரும்பாடு, மூத்திரக்கட்டு கிரிச்சரங்கள் போகும்

**கீழ்க்காய்நெல்லி:** சீதம், அதி பித்தம், ரத்தப்போக்கு போகும்

**கொட்டைக்கரந்தை:** வெட்டை, அதிமேகம், சொறி சிரங்கு போகும்

**வெள்ளறுகு:** குன்மம், குடல்வாதம், சூலை போகும்

கொடி

**பிரண்டை:** மூலம், மூல ரத்தம், மாந்தம், வயிற்றுவலி அதிசாரமுளை, மூலகபம்

## தேகம் (உடல்)

1 **தூலதேகம்:** ஏழு தாதுக்களை ஆதாரமாகக் கொண்டு பிண்ட தத்துவ நிலையில் உள்ளது

2 **சூட்சமதேகம்:** பத்து வாயுக்களையும், பத்து சீவ நாடிகளையும் ஆதாரமாகக் கொண்டு, சராசர தத்துவ நிலையில் விளங்குவது

3 **காரணதேகம்:** ஐந்து பூதங்களை ஆதாரமாகக் கொண்டு அண்ட தத்துவ நிலையில் விளங்குவது

**பிணிகள்**

**உடற்பிணி:** சுரம், நீர்க்கோளாறுகள், நீர்க்கடுப்பு சிரங்கு, வெட்டுக்குத்துக் காயங்கள், அடிபடல், சீதோஷ்ண பேதங்களால் உண்டாகும் குணக்கேடுகள் பசி, தாகம் முதலான பிணிகள்

2 **உயிர்ப்பிணி:** சயம், சன்னி, குட்டம், நீரிழிவு வாதம், குன்மம் முதலான பிணிகள் ஏற்படுகின்றன

3 **பிறவி நோய்கள்:** நரை, திரை, மூப்பு, பயம் சாக்காடு என்ற நோய்களாகவும் பிரித்து, நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றன.

## மருந்து

1 தூலதேகத்தில் ஏற்படும் உடற்பிணிகளைப் போக்க, மூலிகைகள், பூக்கள், பட்டைகள், வேர்கள், கடைச் சரக்குகளைக் கொண்டு, சூரணம், லேகியம், மாத்திரை தைலம், கஷாயம், குடிநீர், சுறுக்கு, மணப்பாகு முதலிய மருந்துகளைச் செய்து, ஐம்பூத அமைப்பாலான தேகத்தின் அப்புப்பூத துணையின் வழியாக உடலில் கலக்கச் செய்து உடற்பிணியைப் போக்குவதெனவும்

2 சூட்சுமத் தேகத்தில் தோன்றும் உயிர்ப்பிணிகளுக்கு, இரசம், கந்தகம், வீரம், பூரம், நவலோகங்கள் முதலான சூட்சுமத் தத்துவ உயிர்ச் சரக்குகளைக் கொண்டு பற்பம், செந்தூரம். பதங்கம் முதலான மருந்துகளைச் செய்து, உடலமைப்பின் தேயு துணை கொண்டு பத்து வாயுக்களையும், பத்துச் சீவ நாடிகளையும் சம்மந்தப் படுத்திப் பெருநாடி நரம்புகள் வழியாக உடல் முழுவதும் பரவச் செய்து, சூட்சுமத் தத்துவங்களால் உண்டாகும் உயிர்ப் பிணிகளைப் போக்குவதெனவும்

3 காரண தேகத்தில் தோன்றும் பிறவி நோய்களுக்குச் சித்து எனச் சொல்லப்படும் அணு, பரமாணுவின் தன்மையில் இரச கல்வமென்றும், மூலிகைகளின் கல்பமென்றும் சொல்லப்படும் காரணத் தத்துவம் அமைந்த மருந்துகளைச் செய்து, பிறவிப் பிணிகளான நரை-திரை, மூப்பு இவைகளை நிவர்த்தி செய்யும் மூச்சுப் பயிற்சி செய்து, பிராண வாயுவின் துணையால், பயம், சாக்காடு என்பவைகளையும் நீக்கிக் கொள்ளுவதென்பது சித்த மருந்தின் அடிப்படைத் தத்துவமாகும்.

(பண்டிட் முத்துக்கருப்பபிள்ளை—சித்த மருத்துவப் பாட போதம்)

## உடல் தத்துவம்

**பிருதுவி;** என்பு, மாமிசம், தோல், மயிர், நாடி என்பன

**அப்பு:** குருதி, மச்சை, சுக்கிலம், நீர்மூளை என்பன

**தேயு:** அகங்காரம், சோம்பல், புணர்ச்சி, பயம் நித்திரை என்பன.

**வாயு:** ஓடல், இருத்தல், நடத்தல், கிடத்தல், நிற்றல் என்பன

**ஆகாயம்:** காமம், குரோதம், லோபம், மோகம் மதம் என்பன ஐம்பூதங்களுக்கு அனு சரணையாக 91 தத்துவங்கள் அமைந் திருக்கின்றன

## சீரண கால அளவுகள்

| | | |
|---|---|---|
| பால், அன்னம், சச்சரிசி, வெல்லம், தேன் பொரி உருண்டை | 8 | மணி நேரம் |
| நீர் அன்னம் | 7½ | ,, |
| தயிர் அன்னம், வெண்ணையன்னம், சூரணம் லேகியம், கிருதம் (நெய்) | 5½ | ,, |
| காய்கறிகள் | 3½ | ,, |
| இலேசாய் ஆறின நீர் | 3¾ | ,, |
| கியாழம் | 3 | ,, |
| பூ, தயிர், பழங்கள், வித்துகள், பருப்புகள், கிழங்குகள் | 3 | ,, |
| பச்சரிசியுடன் சமைத்த உணவு வகைகள் | 2¾ | ,, |
| பழரசங்கள், சர்க்கரை பானகம், வறுத்த மாவுகள், கரைத்த வகைகள் | | |

அரைத்த மருந்துகள், செயநீர்

| | | |
|---|---|---|
| காய்ச்சின நீர் | $2\frac{1}{2}$ | ,, |
| கழுநீர், காடிநீர், துறைநீர், இளநீர், சாராயம் | 2 | ,, |
| தயிரன்னம், மோரன்னம், தண்ணீருடன் உண்ண | $1\frac{3}{4}$ | ,, |
| பற்பங்கள் | $1\frac{1}{2}$ | ,, |

## சித்த மருந்தியல் அடிப்படை

1 தாதுப்பொருட்கள்:

| | | |
|---|---|---|
| 1 | உலோகம் | 11 |
| 2 | காரசாரம் | 25 |
| 3 | பாடாணம் | 64 |
| 4 | உபசரங்கள் | 120 |
| | | 220 |

2 தாவரம் 3 சங்கமம்

விளக்கம்: உலோகம் 11

1 தங்கம் 2 வெள்ளி 3 செம்பு 4 நாகம் 5 உருக்கு 6 இரும்பு 7 வெண்கலம் 8 பித்தளை 9 தரா 10 காரீயம் 11 வெள்ளியம்

## பஞ்சபூத உலோகம்

1 பிருதுவி—தங்கம்
2 காரீயம்—அப்பு
3 செம்பு—தேயு
4 இரும்பு—வாயு
5 நாகம்—ஆகாயம்

2 உப்புகள்: (காரசாரம்) 1 இயற்கை 2 செயற்கை

இயற்கை உப்புகள்: 10 செயற்கை உப்புகள்: 15

ஐம்பூத உப்புகள்:

1 பிருதுவி—கல்லுப்பு 2 அப்பு—சத்திச்சாரம்

3 தேயு—வெடியுப்பு 4 வாயு—சீனாக்காரம்

5 ஆகாசம்—பூநீறு

## பாட பேதம்

### அக. வழலை—12 முறைப்படி

கம்பியுப்பு—பிருதுவி பாறையுப்பு—அப்பு

கல்லுப்பு—தேயு இந்துப்பு—வாயு

வழலையுப்பு—ஆகாயம்

## பஞ்ச உப்பு

1 கரியுப்பு 2 இந்துப்பு 3 வளையலுப்பு 4 கல்லுப்பு 5 வெடியுப்பு இங்குப் பஞ்சபூத உப்புக்கும் பஞ்ச உப்புத் தொகைக்கும் சம்பந்தமில்லை

## 3 பாடாணம் 64

1 இயற்கைப் பாடாணம்—32

2 செயற்கைப் பாடாணம்—32

## பஞ்சபூதப் பாடாணம்

1 அரிதாரம்—பிருதிவி தாரம்—பிருதுவி

2 சவ்வீரம்—அப்பு பூரம்—அப்பு

3 கௌரி—தேயு வீரம்—தேயு

| | | |
|---|---|---|
| 4 | வெள்ளை—வாயு | கௌரி—வாயு |
| 5 | இலிங்கம்—ஆகாயம் | இலிங்கம்—ஆகாயம் |
| | (பச்சைவெட்டு—16) | (நந்தீஸ்வரர் கலைஞானம்) |

### 4 பஞ்சபூத உபரசம்

**பிருதுவி:** பூநாகம், அப்ரகம், சிலாசத்து, இராசவர்த்தம் ஊசிகாந்தம்

**அப்பு:** பொற்கிளிஞ்சல், சங்கு, நண்டு, நத்தை, முட்டை

**தேயு:** கழுதை வண்டு, நிமிளை, வெள்ளைக்கல், இந்திர கோபம், எறும்பு

**வாயு:** அன்னபேதி, சாத்திரபேதி, மயிர், கல்நார், கல்மதம்

**ஆகாயம்:** வைக்கிராந்தம், கற்சவடு, இரசிதசிலை, சாளக் கிராமம், சுக்கான் கல்

## சித்த மருந்துகள் செய்யும் கருவிகள்

| | | | |
|---|---|---|---|
| 1 | கல்வம் | 11 | வரட்டி |
| 2 | கரண்டி | 12 | மணல் |
| 3 | அகல் | 13 | விறகு |
| 4 | குப்பி | 14 | சுண்ணாம்பு |
| 5 | அடைப்பான் | 15 | கரி |
| 6 | சலாகை | 16 | குழி |
| 7 | சட்டி | 17 | புடம் |

8 மூசை (குகை)
9 சிலை
10 களிமண்
18 அடுப்பு
19 துருத்தி

**கல்வம்:** கருங்கல்லால் ஆன, குழியுள்ள அம்மி அதற்குப் பொருத்தமான குழவியும் மிக்க உத்தமம்

**கரண்டி:** மருந்தைப் புரட்ட, வழிக்கவும் பயன்படும். எஃகால் ஆனது உத்தமம். மரம், கொம்பு என்பன மத்திமம்.

**அகல்:** வட்டமானதாகவும், இலேசானதாகவும் பல அளவுகளில் இருக்கவேண்டும்.

**குப்பி:** அடியில் கனமாகவும், அகலம் உள்ளதாகவும் கழுத்துப்புறம் சுருங்கியதாகவும், கறுப்பு நிறமான குப்பிகளே பொருத்தமானவை.

**அடைப்பான்:** மாக்கல் கொண்டு செய்யப்பட்டது.

**சலாகை:** குப்பிகளில் எரிக்கப்படும் மருந்துகளைக் கிளறி விடவும், பதம் பார்க்கவும் பயன்படும் நீண்ட எஃகுக் கம்பிகள்.

**சட்டி:** தேவைக்குத் தக்கபடி மண்ணால் செய்யப் படும்,

**மூசை:** 1 மண்மூசை 2 வச்சிரமூசை என இரு வகைப்படும்.

**வரட்டி:** 12 அங்குல அகலம் அங்குல நீளம் உள்ள வட்ட வடிவமாகக் கோமயத்தால் செய்யப்படுவது.

**புடம்:** பல வகைப்படும். (உமிப்புடம், பட்டைப் புடம், அம்மாவாசைப் புடம்.

**துருத்தி:** 1 ஒற்றைத் துருத்தி 2 இரட்டைத் துருத்தி

ஒற்றைத் துருத்தி ஆட்டின் தோலாலும், இரட்டைத் துருத்தி கன்றின் தோல் கொண்டும் ஆனது. சுண்ணம் செய்ய ஒரு துருத்தியும், சத்துகளைப் பிரிக்க இரட்டைத் துருத்தியும், உலோக வகைகளை உருக்க நான்கு துருத்தியும் வேண்டும்.

## பொருட்பண்பு

1 இரசம் 2 இரச செந்தூரம் 3 இரச கற்பூரம் 4 இலிங்கம் 5 வீரம் என்பன பஞ்ச சூதம் எனப்படும்.

**ரசத்தின் வேறு பெயர்கள்:** ஜீவா, நாதநாதன், சிவ தத்தன், பராபரம், பரமசிவம், மதயானை, வையாளி சிங்கன்வேந்தன்.

**இரசத்தின் பிரிவுகள்:** 1 இராசேந்தின் 2 சூதம் 3 மிஸ்ரரசம் 4 பாரிதம் என்பன.

**தோஷங்கள்:** 1 தூமம் 2 கமபம் 3 சரம் 4 அசரம் 5 உதப்புதல் 6 கோபம் 7 சஞ்சரித்தல்

## கெந்தகம்

**வேறு பெயர்:** பரைநாதம், இரத சுரோணிதம் பொன் வாணி நாதம், நாற்றம், சக்தி, சக்தி பீனிசம்

செந்தூரத்தாதி, தளம், தேவியுரம், அதீதப் பிரகாசம் பீசம், பரை வீரியம், செல்வி விந்து.

**பிரிவுகள்:** 1 பிறப்புக் கந்தகம் 2 வைப்புக் கந்தகம் 3 கோழித்தலைக் கந்தகம் 3 வாணக் கந்தகம் வைத்தியர் கையாளுவது நெல்லிக்காய்க் கந்தகம்.

## லிங்கம்

**வேறுபெயர்:** இலிங்குலிகம், இராசம், ஆண்குறி என்னி, கர்ப்பம், கலிக்கம், காஞ்சனம், சமரசம், சண்டகம் காரணம், சானியம், செந்தூரம், மணிநாகம், வணி மிலேச்சம் வன்னி.

இது கந்தக ரசச்சேர்க்கையால் கட்டிகளாய்ப் பூமியில் கிடைப்பதாக மலை வாகடம் கூறும்,

**பிரிவுகள்:** 1 இயற்கை 2 செயற்கை பற்பம். செந்தூரத்தைக் காட்டிலும் மிக்க பயன் தருவதாகத் தெரிகிறது.

## தாளகம்

**வேறுபெயர்கள்:** மால்பாகம், மால்தேவி, அரிதாரம் இலக்குமி, கோதந்தி, பீதகம், சரம், மிசிர கெந்தகம், நடமண்டலம், பிடாலிகம், சேக்கண்ணி, முககாட்சி, ஆட்குடிச்சி, அரிசக்தி.

**பிரிவுகள்:** 1 மண்ணரிதாரம் 2 மடலரிதாரம் 3 பொன்னரிதாரம் 4 வெள்ளைத்தாளகம் 5 கறுப்புத் தாளகம்

## துணைசெய்த நூல்கள்

1 லலிதா—மருந்து செய்முறைகள் I. I. T. S. சென்னை

2 பண்டிட் முத்துகருப்பபிள்ளை—சித்த மருத்துவப்பாட போதம்

3 ஈஸ்வர பொருட்பண்பு நூல்

4 அகத்தியர் 12000 –

5 போகர் 700 — தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

6 போகர் 7000 — ஏ. ஏ. இராமையா, எம். ஏ.,

7 இராமமூர்த்தி—தமிழ்நாடு பாடநூல் நிறுவனம் தமிழ்நாட்டுத் தாவரங்கள்

## மாதம் 12க்கும் கற்ப அனுபானங்கள்

இறுகுமே செங்கடுக்காய் மெத்தநன்று
இதமாகக் கிடைத்தால் பொற்கடுக்காய்நன்று
அறுகுமே ஆனியா வணிக்குமப்பா
அழகான வெல்லத்தோடே கொள்ளு
தருகுமே சித்திரை வைகாசிக்கப்பா
சாதகமாய்ச் சுக்கினுட கியாழத்தில்கொள்ளு
மறுகுமப்பா புரட்டாசி ஆடிக்கப்பா
மாசற்ற குறிஞ்சித்தேன் தன்னில்கொள்ளே,

கொள்ளவே ஐப்பசிக்கும் கார்த்திகைக்குமப்பா
குமரியாம் சார்தனிலே வைத்துக்கொள்ள
விள்ளவே காயசித்தி யோகசித்தி
வேதாந்த மனோன்மணியாம் ஞானசித்தி

தள்ளவே யஷ்டமாம் யோகசித்தி
　　தாரணியில் மானிடர்கள் கௌசித்தி
மெள்ளவே சதாகால இந்தமார்க்க
　　மேதினியிற் கசடறவே வைத்துப்போற்றே.

வைத்துமே மார்கழிதை மாசிக்கப்பா
　　வாகான கற்கண்டினோடே உண்ணு
பைத்துமே பங்குனிக்கு நெய்யில்கொள்ளு
　　பன்னிரண்டு மாதத்தின் பருவம் சொன்னேன்
நைத்துமே இப்படித்தான் பருவமாக
　　நானுண்டபடி சொன்னேனீயு முண்ணு
பொய்த்துமே போகாமல் பூசைபண்ணு
　　போக்கோடே வாசியைத்தானிமுத்து வாங்கே.

—போகர் 7000

## அகத்தியர் நூல் விவரம்

கேளப்பா மூன்றுலட்சம் காப்புச்சொன்னேன்
　　கிருபையுள்ள வாதமது லட்சம்காப்புச்
சூளப்பா வயித்தியத்திலிரண்டு லட்சம்சொன்னேன்
　　அவற்றைக் குறுக்கி இருகாண்டஞ் சொன்னேன்
பாரப்பா அதைக்குறுக்கிப் பாதியாகப்
　　பாடினேன் அறுநூறு நாலுஞ்சொன்னேன்
கேளப்பா திராவகம்எண்ணூறு சொன்னேன்
　　வேதைமுறையை ஐந்நூறில் வெளியிட்டேனே.

வெளியிட்ட ஐம்பதிலே மூன்றும் சொன்னேன்
　　விவரமாய் முந்நூறில் செந்தூரம்சொன்னேன்
வழியாகஎண்பதில் மூப்புவும் சொன்னேன்
　　வயித்தியம்தான் ஆயிரத்தைந்நூறும் சொன்னேன்

அழியாத முந்நூறில் கர்மதர்மம்

அன்பாகச் சொன்னதைநீ அறிந்துபாரு

முழியாதே நானூறில்இரண்டு சொன்னேன்

முடினதோர் நீற்றினமாம் நாலுநூறே.

நானூறில் வயித்தியமும் பூரணமும்தோன்றும்

நாடியுடன் குருநாடி நன்றாய்த் தோன்ற

பாலான முப்பாலு நான்காய்த்தோன்றப்

பாடினேன் வைத்திய பூரணமர்மிதப்பா

தேடினால் கிடையாதிவ் வுலகத் துள்ளே

சிவயோகி வைத்திருப்பார் கொடுக்க மாட்டார்

நாளாக அவர்களிடம் தொண்டுசெய்து

நன்மையுடன் நூல்வாங்கி நோட்டம்பாரே.

(அக. பரிபூரணம் 400)

